# வைதிக தர்ம வர்த்தனி



மலர் 12
இதழ் 6

விளம்பி௵
பங்குனி௴

ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

## விளம்பி௵ பங்குனி௴ சிசிரருது. உத்தராயணம்.

| தமிழ் | | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ஶ்ரா. திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | 15 | ஞா. | ஷஷ்ட. | 57-48 | க்ருத் | 40-40 | சி. | ஷஷ்ட |
| 2 | | 16 | திங். | ஸப். | 60-00 | ரோ. | 47-45 | அ. | ஸப். |
| 3 | | 17 | செ. | ,, | 3-27 | மிருக. | 53-45 | சி. ம. | அஷ்ட |
| 4 | | 18 | புதன். | அஷ்ட. | 7-48 | திரு. | 58-10 | சி. | நவ. |
| 5 | | 19 | வியா. | நவ. | 10-27 | புன. | 60-00 | அ. | தச. |
| 6 | மார்ச்சு மீ | 20 | வெள். | தச. | 11-07 | ,, | 0-47 | சி. | ஏகா. |
| 7 | | 21 | சனி. | ஏகா. | 9-55 | பூச. | 1-25 | சி. ம. | த்வா |
| 8 | | 22 | ஞா. | த்வா. | 6-46 | ஆயி. | 0-12 | சி. | த்ர. |
| | | | | | | மக. | 57-15 | ம. சி. | |
| 9 | | 23 | திங். | த்ர. | 1-50 | பூர. | 52-55 | சி. | சசி. |
| | | | | சசி. | 55-30 | | | | |
| 10 | | 24 | செவ் ○ | பௌ. | 48-10 | உத். | 47-30 | அ. சி. | பௌ |
| 11 | | 25 | புத. | ப்ர. | 40-12 | ஹஸ். | 41-27 | சி. | ப்ர. |
| 12 | | 26 | வியா. | த்வி. | 31-57 | சித். | 35-07 | சி. அ. | த்வி. |
| 13 | | 27 | வெள். | த்ரி. | 23-45 | சுவா. | 28-52 | சி. | த். ச. |
| 14 | 1959 ௵ | 28 | சனி | சது. | 16-00 | விசா. | 23-05 | சி. | பஞ். |
| 15 | | 29 | ஞா. | பஞ். | 8-57 | அனு. | 18-05 | ம. | ஷஷ்ட |
| 16 | | 30 | திங். | ஷஷ்ட. | 2-50 | கேட். | 14-05 | சி. | ஸப். |
| | | | | ஸப். | 57-58 | | | | |
| 17 | | 31 | செவ் | அஷ்ட. | 54-27 | மூலம். | 11-20 | அ. சி. | அஷ்ட |
| 18 | | 1 | புதன் | நவ. | 52-22 | பூரா. | 9-57 | அ. | நவ. |
| 19 | | 2 | வியா. | தச. | 51-42 | உத்தி. | 9-55 | சி. | தச. |
| 20 | | 3 | வெள். | ஏகா. | 52-27 | சிர. | 11-20 | ம. சி. | ஏகா. |
| 21 | | 4 | சனி | த்வா. | 54-32 | அவி. | 14-05 | சி. அ. | த்வா. |
| 22 | ஏப்ரல் மீ | 5 | ஞா. | த்ர. | 57-42 | சத. | 18-02 | சி. | த்ர. |
| 23 | | 6 | திங். | சசி. | 60-00 | பூரட். | 23-05 | ம. சி. | சசி. |
| 24 | | 7 | செவ் ● | ,, | 2-05 | உத்தி. | 29-07 | அ. | அமா |
| 25 | | 8 | புதன் | அமா. | 7-12 | ரேவ. | 35-52 | ம. | ப்ர. |
| 26 | | 9 | வியா. | ப்ர. | 13-05 | ,, | 43-17 | அ. சி. | த்வி. |
| 27 | | 10 | வெள். | த்வி. | 19-22 | அசு. | 50-58 | சி. | — |
| 28 | | 11 | சனி | த்ரி. | 25-55 | பர. | 58-42 | அ. | த்ரி. |
| 29 | | 12 | ஞா. | சது. | 32-17 | க்ருத். | 60-00 | சி. | சது. |
| 30 | | 13 | திங். | பஞ். | 38-05 | ரோ. | 6-08 | அ. | பஞ். |

1௳ கிருத்திகை. 7, 20௳ ஏகாதசி. 8, 22௳ ப்ரதோஷம். 10௳ சந்திர கிரஹண. 24௳ அமா. 26௳ தெலுங்கு வருஷப்பிறப்பு.

எதனுல் எந்த நேரம் வருகிறதென பாத்மம் கூறுகிறது.

வைதிக தர்ம வர்த்தனீ.



விளம்பி ஞு பங்குனிமீ

மலர் 12] [இதழ் 6

தனிப்ரதி அணா 7.

வருஷசந்தா ரூ. 5

கார்யாலயம் : கடவாசல்,

வடகால் P.O. (Via.) சீர்காழி

(தஞ்சை ஜில்லா.)

## பொருளடக்கம்.



---

**பேபர் ப்ரமாணம். சாஸ்த்ரம் ப்ரமாண மில்லையா?** சிருங்கேரி முன் ஜகத்குரு உபன்யாஸம் செய்கையில் சொல்லப்பட்டது:— சில ஆண்டுகளுக்கு முன் பேர்மென், பத்ரிகை ஆசிரியரிடம் வந்து, சில வரி பாக்கி, விஷயம் வேண்டும் என்றான். தஞ்சை கருந்தட்டாங்குடியில் ஒருவர் குளத்தில் விழுந்து இறந்தார் என போடு என்றார் ஆசிரியர். மறுபடியும அவன் வந்து, 2 வரி பாக்கி என்றான். விசாரித்தபோது அது உண்மையல்ல எனத் தெரிந்தது என போடு என்றார் ஆசிரியர். வேத சாஸ்த்ரம் அநாதியான வாக்கு.

## நவரஸப் பகுதி.

**பிணம் பேசுகிறதே:** ஒரு தர்ம ப்ரசாரகரை, நாஸ்திகர் கடவுள் இருந்தால் கண்ணால் காணக் காட்டும், இல்லையேல் எப்படி நம்புவது ? என்றார். தார்மிகர், ஐயா ! உமக்கு உயிர் இருக்கிறதா ? இருந்தால் கண்ணில் காட்டும் ! உமது கொள்கைப்படி உயிரில்லாப்பிணமன்றோ நீர் என்றார்.

**அன்யூரானதால் எண்ணூர் என்றீர் ?** வளவனூரில் ஸ்ரீஜகத்குரு முன்னிலையில், எண்ணாயிரம் பிரும்மதேசம் என்ற ஓர் ஆலய சிலா சாஸனத்தில் நான்கு வேதமும் கற்பிக்கப்பட்ட விவரமிருப்பதாகப் பேசினார் ஒருவர். ஆனாலவர் அவஸரத்தில் ஸந்நிதாநத்தின் எதிரில் பேச பயத்தினால் எண்ணாயிரம் என்பதற்குப் பதிலாக எண்ணூரு பிரும்மதேசம் என்றார். ஹாஸ்ய ரஸம் ததும்ப ஸ்ரீகாமகோடி பீடாதிபதிகள் பழகிய அவரை நீர் எந்த ஊர் ? என்றார். அன்னியூர் என்றார் அவர். அதனால்தான் எண்ணாயிரத்தை எண்ணூரென்றீரா ? எனக் கேட்க ஸபையில் ஒரே சிரிப்பு !

**கவிதையால் கதவு திறந்தது.** பௌத்தர்களை வாதத்தால் ஜயித்து ஹிந்து தர்மத்தை நிலைநாட்டியவர் உதயணாசார்யரெனும் புலவர். ஓர் ஆலயம் சென்றார். பௌத்தபாதை அகன்றபின் ஆலயங்கள் செழிப்பாயின. அவர் தர்சனத்திற்கு வந்தபோது கதவு மூடியிருந்தது. 'பௌத்தர் திரும்பிவந்தால் நீர் நம்மைத்தான் நாடவேண்டும், இப்போது என்னை மதிக்கவில்லையே, எனும் கருத்து கொண்ட பாட்டைக் கூறினார்! கதவு தானே திறந்தது.

---

**உண்ணக்கூடாததை உண்பதால் குல்மரோகமுண்டாகும்**

# அனைவருக்கும் ஸ்ரீ ஜகத்குரு கூறிய செய்தி.

சென்னையில் மூன்று கோபுரங்கள் எழுப்பக் கண்டேன். அதுபோல் நமது தர்மமும் எழும்பி ப்ரகாசிக்கவேண்டும். அதர்மத்தை ஶாந்தியுடனிருந்தால் ஜயிக்கலாம்! 'ஸத்யமேவ ஜயதே' என்பது அனுஷ்டானத்திற்கு வந்தால் எல்லோருக்கும் க்ஷேமம் உண்டாகும். அசோக சக்ரத்தைக் கண்டு பௌத்தம் என அஞ்ச வேண்டாம்! விஷ்ணு சக்ரம், கீதை கூறிய தர்மசக்ரம், இவைகளிலிருந்து வந்த சக்ரமாம்!

நாயன்மார்கள், ஆழ்வார்கள் பாடியதால் கோவில்களுக்குப் பெருமை ஏற்பட்டது. அவர்கள் சொல்லை மதித்து சோழராஜர், அச்யுதராயர் முதலியவர் ஆகாயமளாவிய கோபுரங்களை எழுப்பினார்கள். கருங்கல் இல்லாத விடங்களில் அறுபத்துநான்கு கோபுரங்கள் கட்ட அஸ்திவாரமிட்டார். இன்னும் சிலவிடங்களில் கருங்கல் தூண்கள் கோபுரங்களில்லாமலே யிருக்கின்றன. சேலத்தில் ஒரு வைச்யர் ஸமீபத்தில் கருங்கல் கோபுரங் கட்டி கும்பாபிஷேகம் செய்தார். கும்பகோணத்தில் லக்ஷ்மீநாராயணன் என்ற ப்ரஹ்மசாரி, சாரங்கபாணி ஸ்வாமிக்கு ஓர் கோபுரம் கட்டினார். விவாஹம் செய்துகொண்டு ஶ்ராத்தம் முதலிய கார்யங்களைச் செய்விக்க ஒரு புத்ரனைப் பெறவேண்டாமா? என அவனது தாய் முதலியவர் வருந்தினர். பகவான் ஸ்வப்னத்தில் தோன்றி நானே செய்கிறேன் என்றார்! அன்றுமுதல் இன்றுவரை அக்கோவிலில் பிரம்மசாரிக்கு சிராத்தம் நடக்கின்றது.

வேத மந்திரத்தினால்தான் சிலைகளில் தேவசாந்நித்யம் ஏற்படுகிறது. அவ்வேதத்தை நியமத்துடன் அத்யயனம் செய்தால்தான் மந்த்ரஸித்தி ஏற்படும். பல பக்தர்களுடைய தபஸ்ஸே வானளாவும் கோபுரமானது. மலையாளத்திலும் ஆந்திர தேசத்திலும் இன்றைக்கும் வேதாத்யயனம் அதிகமாகச் செய்யப்படுகிறது. தமிழ்நாட்டில் மிகக் குறைவே. அதிலும் தற்சமயம் மாணவரின்றி பல பாடசாலைகள் மூடப்பட்டு இருக்கின்றன. நம்பூத்திரிகள் வெகு நியமத்துடன் 5 வருஷகாலம் வேதாத்யயனம் செய்தபின்பே மற்ற கல்விகளைக்கற்பார்கள். மலையாள ப்ரதமரான "நம்பூத்ரிபாட்" நன்கு அத்யயனம் செய்தவரே. **கம்யூனிஸ்டுகளே கோவிலில் கைவைக்காதே** என்றனர். பெஜவாடாவில் நவராத்ரியில் ஒவ்வொரு ஆண்டும் வேதபரீக்ஷை நடக்கும். அதில் யோக்யதா பட்டம் பெற்றவர்களுக்கு ஏழைகள் கூட தன்னால் ஆனஅளவு ஸன்மானம் செய்வார்கள். கல்யாணத்திலும் வேதஶாஸ்த்ர மறிந்த

**பஹிஷ்டை பார்த்ததை உண்டால் வயிற்றில் புழு வரும்.**

வர்க்கு ஸன்மானம் நடக்கின்றது. தமிழ்நாட்டில் ஸதிருக்கும் பாட்டுக்குமே ஸன்மானம் நடக்கிறது!

**நாம் அன்யமதம் போகலாமா?** நம் மதத்தில் எண்ணிறந்த ஸ்வாமிகளுண்டு. ஸ்வாமி உண்டா? இல்லையா? அவரால் நமக்கு என்ன பயன் என்று பேசுகின்றனர்! நமது, துன்பங்களை முறையிடவேண்டுமா? அவருக்கு எல்லாம் தெரியுமாதலால் நாம் கூற வேண்டாமென சிலர் கருதுவர். ஏன் அவரை பூஜிக்கவேண்டும்? அவர் குறையில்லாதவர். அவரைப் பூஜித்தால் நாமும் குறையில்லாதவர்களாக இருக்கலாம். நமக்கு ஒரு தெய்வத்தினிடம் பற்று இருந்தால் மற்றெல்லா தெய்வங்களையும் தெய்வமென ஏற்கலாமா? எல்லா மொன்றுகவேயிருந்தால் நாம் அன்ய மதத்தில் ஏன் சேரக் கூடாதெனக் கேழ்ப்பர். வீர சைவர்களும் வீர வைணவர்களும் கண்டிப்பாக மற்ற தேவதையை வணங்கக்கூடாதென்பர். அப்படியானுல்தான் நம் மதம் நிலைக்குமென்று எண்ணுவார்கள். ஒவ்வொரு ஸ்வாமியும் பரதேவதை. ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய, காரணம் என்பதால் எல்லோரையும்தான் தெய்வம் எனக் கூறவேண்டும். ஆனுல் இதுவரை தானும் தன் முன்னேர்களும் பூஜித்துவந்த தேவதையைவிட்டு அன்னிய தேவதையை உபாசித்தால் முதல் தேவதைக்கு த்ரோகம் செய்த பாபம் ஏற்படும்.

ஶிகை, புண்ட்ரம், ஸூத்ரம், ஸமயாசாரம் இவைகளை நம் முன்னேர் அனுஷ்டித்தபடியே நாமும் அனுஷ்டிக்க வேண்டுமென்பது உலகத்திலேயே முதலாவதாகத் தோன்றிய வேதத்தின் கருத்தாம். நமது தெய்வத்தைக் காலால் உதைத்துத் தள்ளி மற்ற தெய்வத்தைக் கைக்கொண்டால் எத்தனை ஜன்மமெடுத்தாலுமிந்த துரோக பாபமகலாது.

பெரியோர் பாடலில் பகவானைப்பற்றி கூறும்பொழுது வேதமோதியவர்களால், அனுஷ்டானம் நிறைந்தவர்களால் பூஜிக்கப்பட்டவனே என எண்ணி வேதத்திற்கும் அனுஷ்டானத்திற்குமே பெருமை கூறினர்.

7வது வயதிலே பூணலைப்போட்டு பள்ளியிலிருந்து வந்தவுடன் கழுத்துமட்டில் குளித்து மடிவஸ்த்ரமுடுத்தி நியமத்துடன் சிறிதளாவது வேதத்தைக் கற்றுக்கொடுக்க வேண்டும். வாயினுல் சொல்வது மட்டிலும் போதாது. ஒவ்வொருவரும் கூடியவரை அனுஷ்டானம் செய்யவும். அப்படிச் செய்தால் தான் வேதத்திற்கும் பகவானுக்கும் பெரியோர்க்கும் தேசத்திற்கும் துரோகம்செய்யாததாகும்.

---

**பூனை நாய் பார்த்திருக்க புஜித்தால் உடலில்நாற்றம்.**

இப்பொழுது அத்யயனம் செய்தவர்களில் வேதம் மாத்திரம் கற்றவர் சிலர். பாஷ்யமறிந்தவர் மிகக் குறைவே. ஆதரிப்பார் இன்றி அவர்களது யோக்யதை ப்ரகாசிக்க வில்லை. முன்னர் அவர்களுக்கு மான்ய மளிக்கப்பட்டது. தற்சமயம் ஒவ்வொரு வரும் இவ்வளவுதான் பூமி வைத்துக்கொள்ளலாம் என சட்டம் வருவதால் பூதானம் செய்யும்படி சிலரைக் கேட்டோம். அந்த நிலத்தை வேதம், பாஷ்யம் முதலியன கற்றவர்க்கு அளிப்போ மெனில் அதிலும் சில கஷ்டங்களிருக்கின்றன. சென்னைபோன்ற விடத்தில் வீடுவாங்கியளித்தல் கொஞ்சம் பலனளிக்கும். பாஷ்யம் படிப்பவர்க்கு ஐந்து ஆண்டுகளில் பத்து பரீக்ஷைவைத்து பாஷ்ய புத்தகமும் வாங்கி அளித்து பரீக்ஷையில் தேறியவுடன் அவர்களது ஜீவனத்திற்கு ஸன்மானத்துடன்கூட நூறு அல்லது இருநூறு ரூபாய் கொடுக்கப்படுகின்றது. இதற்காக ஒரு நிதி திரட்டப்பட்டு **"சாத்தூர் ஜமீன் ஸ்ரீ S. R. கிருஷ்ணமூர்த்தி ஐயர்"** மூலம் அந்த வேலை நடக்கின்றது.

தற்சமயம் உபாத்யாயம் செய்துவைப்பவர் கஷ்டத்தினாலும் வெறுப்பினாலும் இது என் தலையோடு போகட்டுமென்று லௌகிகர் களைப்போல் ப்ராசீந ஸொத்தை வித்து பி. ஏ. எம். ஏ. என்றஸர்டி பிகேட் வாங்கிக்கொடுக்கிறனர் தன் பிள்ளைகளுக்கு. இனி பண்ணி வைப்பவர் அகப்படமாட்டார் போலிருக்கிறது. ஆதலால் இப்போ துள்ளவருக்கும் ஆதரவு காட்டவேண்டும். கர்மாவில் நம்பிக்கை உண்டாகும்படிச் செய்வது நம் கடமை. அதற்காக வேத தர்ம ஶாஸ்த்ர பரிபாலந ஸம்மேளநம் ஆங்காங்கு நடக்கிறது. அதை ஸ்ரீ **G. M. ராமஸ்வாமி அய்யர்** என்பவர் நடத்துகிறார். பள்ளியில் படிக்கும் 5-வது வகுப்பு மாணவரைத் தேர்ந்தெடுத்து ஏழு ஆண்டு களுக்குள் மிகமுக்யமான வேதம், பிரயோகம் இவைகளைக் கற்பிக்க அந்தந்த பேட்டையிலும் இப்போது வகுப்பு நடக்கிறது. சிகையுள் ளவருக்கு மாத்ரம் கொஞ்சம் உபகாரப்பணம் கொடுக்கப்படுகிறது.

ஒரு கட்டுப்பாடு வேண்டும். அது இல்லாததால் பல கஷ் டங்கள் வருகின்றன என்று இப்போது எல்லோரும் உணர்ந்திருக் கின்றனர். இதைத்தான் நியமம் என்போம். அவரவர் நினைத்த படி நியமத்தை மீறினால் முடிவில் தர்மமே இராது! நியமமில்லா தவன் ஒன்றுக்கும் உபயோகப்படமாட்டான். மநஸ் சுத்தி இருந் தால் போதும், இதெல்லாம் வேண்டாமென்பது வீண் வாதம். நம் மநஸ் ஶுத்தி நமக்கே தெரியும்! நியமத்துடன் வேதத்தை

---

**ஸ்வாமி நிவேதனம் செய்யாமல் புஜித்தால் வயிற்றுவலி.**

ரக்ஷித்தால் நம் தர்மத்தை ரக்ஷிப்பதாகும். வேதம் மறை. பூமியில் அமிழ்ந்திருக்கும் வேர் அது. அதற்காக, நான் சொல்வது ஹிதம் என்று தோன்றினால் எல்லோரும் வீட்டில் ஒரு நக்ஷத்ர கலசம் வைத்து நீங்கள் பிறந்த நக்ஷத்திரத்தில் 1 ரூபாய் போடுங்கள். பன்னிரண்டு மாதமானவுடன் மடத்திற் கெழுதினால் யாரிடமதை அளிப்பதென தெரியும். நீங்கள் போடுவதுடன் உங்கள் நண்பர் ஒருவரையும் அப்படிச் செய்யச் சொல்லுங்கள். இதற்கு இசைந்தவர் நாளைக்கே மடத்திற்கு எழுதுங்கள்.

---


## PRESS & REGISTRATION OF BOOKS ACT

*Registration of Newspapers (Central) Rules 1956.*

FORM IV (SEE RULE 8)

*Statement about ownership & other particulars about "VAIDHIKA DHARMA VARDHINI."*

| | | |
|---|---|---|
| 1. *Place of Publication* | ... | Kadavasal, Vadagal (Post), (Via) Sirkali, Tanjore Dt. |
| 2. *Periodicity of its Publication* | ... | Monthly |
| 3. *Printers Name* | ... | A. Venkataraman |
| *Nationality* | ... | Indian |
| *Address* | ... | Kadavasal, Vadagal (Po.), (Via) Sirkali, Tanjore Dt. |
| 4. *Publisher's Name* | ... | A. Venkataraman |
| *Nationality* | ... | Indian |
| *Address* | ... | Kadavasal, Vadagal (Po.), (Via) Sirkali, Tanjore Dt. |
| 5. *Editor's Name* | ... | Sri V. Somadeva Sarma |
| *Nationality* | ... | Indian |
| *Address* | ... | No. 2, Station Road, West Mambalam, Madras-17. |
| 6. *Names & addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital.* | | Partners: Sri V. Somadeva Sarma, No. 2, Station Road, West Mambalam, Madras-17. A. Venkataraman, Kadavsal, Vadagal (Po.), (Via) Sirkali, Tanjore Dt. |

I, A. VENKATARAMAN, *hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

*Dated, 1-3-59. Signature of Publisher: (Sd.)* A. VENKATARAMAN.


---

சாப்பிடாதே என ஒருவரைத் தடுத்தால் அஜீர்ணம்.

# ஸாமவேத ஸந்த்யாவந்தனம்.

## உபஸ்தான மந்த்ர அர்த்தம்.

*[கருத்து* - ஒ சூரியனே! நான், ப்ராம்மணர்களுக்குள்ளும், க்ஷத்ரிய வைஸ்யர்களுக்குள்ளும் யஸஸ் உள்ளவனாக இருக்கவேண்டும். பஞ்சபூத வடிவமான இந்த ப்ரபஞ்சத்திற்குள் கீர்த்திபெற்றவர்களுக்குள் கீர்த்தி உள்ளவனாக இருக்கவேண்டும்! எனக்கு அநுக்ரஹம் செய்யாமல் விலகிய தேவர்களே என்னிடம் வந்து அருள்புரியும்படிச்செய்யும்! கர்ம பூமியும் பாபத்தை அகற்றுவதுமான பூமியில் காந்தியுள்ளவனாகவும் சிறந்தவனாகவும் இருக்க வேண்டும். பகலிலும் இரவிலும் சூர்யனைப்போல் உடல் காந்தி உள்ளவனாக இருக்கவேண்டும்.

பாபிகளுடைய அன்னத்தைப் புஜிப்பதால் உண்டானபாபமும், உமது காந்தியால் பிரகாஸமாகும் பொருள்களில் பார்க்கத்தகாததைப் பார்ப்பதால் உண்டான பாபமும் என்னிடத்தி லிருப்பது, உம்மிடமும் உண்டு! அந்த பாபத்தினால் என்னை அழிந்துவிடும்படிச்செய்யாதீர்! என்னிடத்தில் கோபத்துடன் பிரவேஸிக்க வேண்டாம்! பகலுக்கு அபிமானியான ஸூர்யன் இஷ்டத்தைப் பூர்த்திசெய்யட்டும். இரவிற்கு அபிமானியான வருணனும் துக்கக் கடலிலிருந்து என்னைக் கரை எற்றட்டும்! ராத்திரி தேவதை இஷ்டங்களைப் பூர்த்திசெய்யட்டும். பகல் தேவதை துக்கக்கடலிலிருந்து கரை எற்றட்டும்!

ஓ ஸூர்ய! மோக்ஷம்வரையிலுள்ள புருஷார்த்தங்களைப பெறுவதற்காக, தோணிபோன்ற உடலை யான் பெறவேண்டும்! அது பூர்ணமாயும், அபமிருத்யு எனும் ஓட்டை இல்லாததாகவும், ஸம்ஸாரஸாகரக் கரையைத் தாண்டிவைப்பதாகவும், அதற்கேற்ற உபாயமெனும் நூற்றுக்கணக்கான துடுப்புகள் உள்ளதாகவுமிருக்க வேண்டும்! ப்ரணவப்பொருளான ஆதித்யனுக்கு நமஸ்காரம்.

ஓ ஆதித்திய! உதயமாகும் உம்மை அநுஸரித்து நானும் விருத்தி அடையவேண்டும்! ப்ரதிஷ்டை அடைகின்ற உம்மை அநுஸரித்து நானும் பிரதிஷ்டை அடையவேண்டும்!

மாத்யான்ஹிக உபஸ்தாநம் கரிஷ்யே. உத்த-ஸூகம்.

---

**அசுத்தப் பொருளை உண்ணத்தந்தால் வாந்தி.**

*உதி$^{3}$த்யமித் யஸ்ய ஸூர்யரிஷி: காயத்ரீ சந்த: ஸூர்யோ தேவதா.*

**उदुत्यं जातवेदसं देवं वहन्तिकेतवः ।**
**दृशे विश्वाय सूर्यम् ॥**

*உது$^{3}$த்யம் ஜாதவேத$^{3}$ ஸம்தேவம் வஹந்தி கேதவ: ।*
*த்$^{3}$ருஶே விஶ்வாய ஸூர்யம் ॥*

*(என அர்க்யமளித்து ஆகாஶ முத்ரை காட்டி)*

**चित्रं देवानामुद गादनीकं चक्षुर्मित्रस्य वरुणस्याग्नेः ।**
**आप्राद्यावापृथिवी अन्तरिक्ष*ँ*सूर्य आत्मा जगतस्तस्थुषश्च ॥**

*சித்ரம் தேவாநாமுத$^{2}$க$^{3}$ாத$^{3}$ நீகம் சக்ஷுர் மித்ரஸ்ய வருணஸ்யாக்நே: । ஆப்ராத்யாவா ப்ருதி$^{2}$வீ அந்தரிக்ஷ கு$^{3}$ம் ஸூர்ய ஆத்மா ஜக$^{3}$த: தஸ்து$^{2}$ஷஶ்ச ॥*

**ओं भूर्भुवस्सुवः सूर्य इवदृशे भूयासम् । अग्निरिव तेजसा, वायुरिव प्राणेन, सोम इव गन्धेन, बृहस्पति रिव बुद्धया, अश्विना विव रूपेण, इन्द्राग्नी इव बलेन ब्रह्मभाग एवाहं भूयासं, पाप्म भागामे द्विषन्तः ॥**

*ஓம் பூ$^{4}$ர்ப்பு$^{4}$வஸ் ஸுவ: ஸூர்ய இவத்$^{3}$ருஶேபூ$^{4}$யாஸம் । அக்$^{3}$நி ரிவதேஜஸா-வாயுரிவ ப்ராணேந-ஸோம இவக$^{3}$ந்தே$^{4}$ந-ப்ருஹஸ்பதிரிவ புத்$^{4}$வ்யா-அஶ்விநாவிவரூபேண, இந்த்ராக்நீ இவ ப$^{3}$லேந ப்ரும்ம ப$^{4}$ாக$^{3}$ ஏவாஹம் பூ$^{4}$யாஸம்-பாப்ம ப$^{4}$ாக$^{3}$ா மே த்$^{3}$விஷந்த: ॥*

**உதுத்யம்:** எல்லாம் அறிந்தவரும் பிரகாஶமானவருமான ஸூர்யனை உலக க்ஷேமத்திற்காக கிரணங்கள் மேலே தூக்கிப் பிடித்துக்கொண்டிருக்கின்றன. 2. **சித்ரம்:** தேவர்க்கு ஸேனை போன்றதும் மித்ரன் வருணன் அக்நி இவர்களுக்கு கண்போன்றதும் பிரகாஶமானவைகளில் சிறந்ததாயுமுள்ள ஸூர்யமண்டலம் கிழக்கே உதயமாகி மூன்று லோகங்களையும் தனது கிரணங்களால் வியாபித்திருக்கிறது. அந்த மண்டலாதிபதியான ஸூர்யன்

---

**கோள் சொன்னால் காஶ நோய் வரும்.**

சராசர வஸ்துக்களுக்கும் ஆத்மாவாக இருக்கிறார். 3. த்ருவே: த்ருஷ்டியில் ஸூர்யனைப்போலும், தேஜஸ்வினால் அக்னிபோல வும், வேகமாகச் செல்வதில் வாயுபோலவும், கந்தத்தில் ஸோமன் போலவும், புத்தியில் பிரஹஸ்பதி போலவும், ரூபத்தில் அஸ்வினீ போலவும், பலத்தில் இந்த்ராக்னீ போலவும் நான் ஆகவேண்டும். ஓ பகவானே ! பிரும்மலோகத்தில் நான் வாஸம்செய்யவேண்டும். எனது ஶத்ருக்கள் எனது பாபத்தை ஏற்றுக்கொள்ளட்டும்.

ஸந்த்⁴யாயை நம: | ஸாவித்ர்யை நம: | க³ாயத்ர்யை நம: | ஸரஸ்வத்யைநம: | ஸர்வாப்⁴யோ தே³வதா³ப்⁴யோ நமோ நம: ||

எனக்கூறி எந்தத் திசையை நோக்கி ஜபம் செய்கின்றோமோ அத்திசையிலிருந்து முறையே நான்கு திசையிலும் ஸந்த்யை முத லிய தேவதைகள் இருப்பதாக எண்ணி அஞ்ஜலிபந்தம் செய்ய வேண்டும். பிறகு எல்லா தேவர்க்கும் நமஸ்காரம்.

காமோ கார்ஷீன் மன்யுரகார்ஷீன் நமோ நம: |

காமக்ரோதங்கள் எல்லா கார்யங்களையும் செய்விக்கின்றதால் அவைகளுக்கு என்னிடமிருந்து விலகி அருள்புரியவேண்டும் என அதற்காக நமஸ்காரம்.

அபி⁴வாதயே.........கோத்ர:ஸூத்ர:.........ஸாமஶாக²ாத்⁴ யாயீ..........ஶர்மா நாமாஹம் அஸ்மிபோ⁴: |

இந்த ப்ரவர கோத்ரத்தில் பிறந்தவனும், ஸூத்ரமுள்ளவ னும், ஸாம ஶாகையைச் சேர்ந்தவனும், இந்த சர்மா உள்ளவனு மான நான் நமஸ்காரம் செய்கிறேன்.

ப்ராச்யை தி³ஶே நம: | த³க்ஷிணாயை தி³ஶே நம: | ப்ரதீச்யைதி³ஶே நம: | உதீ³ச்யைதிஶே நம: எனச்சொல்லி நான்கு திசைகளுக்கும் அஞ்ஜலிபந்தம் செய்க.

ஊர்த்⁴வாய நம: | அத⁴ராய நம: | அந்தரிக்ஷாயநம: பூ⁴ம்யை நம: | ப்ரஹ்மணே நம: | விஷ்ணவே நம: | யமாய நம: | என்ற தேவர்களைக் குறித்தும் அஞ்ஜலி செய்ய வேண்டும். தென் திசையைப் பார்த்து

யமாய த$^{4}$ர்மராஜாய ம்ருத்யவே சாந்தகாய ச |
வைவஸ்வதாய காலாய ஸர்வபூ$^{4}$த க்ஷயாய ச | ஔது$^{3}$ம்
பராய த$^{3}$த்$^{4}$னய நீலாய பரமேஷ்டினே | வ்ருகோத$^{3}$ராய
சித்ராய சித்ரகுப்தாய வை நம: | என்று யமனையும், சித்ர
குப்தனையும் துதிக்கவும். வடக்கு முகமாக நின்றுகொண்டு மஹா
தேவனைத் துதிக்கவேண்டும்.

ऋतꣳसत्यं परं ब्रह्म पुरुषं कृष्ण पिङ्गलम् ।
ऊर्ध्वरेतं विरूपाक्षं विश्वरूपाय वै नमो नमः ॥

ருதகு$^{3}$ம்ஸத்யம் பரம்ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ண பிங்களம்
ஊர்த்$^{4}$வரேதம் விரூபாக்ஷம் விஶ்வரூபாய வை நமோநம:

ஸத்யரூபியாயும், பரப்ரும்ம ரூபியும், கறுப்பாகவும், சிவப்பாகவும், ரேஜஸ்ஸை அடக்கியவரும், முக்கண்ணனுமான ஶிவனுக்கு நமஸ்காரம்.

நர்மத$^{3}$ாயை நம: ப்ராதர் நர்மதாயை நமோநிஶி |
நமோऽஸ்து நர்மதே$^{3}$ துப்$^{4}$யம் த்ராஹிமாம் விஷஸர்பத: ||
ஜரத்காரோர் ஜரத்கார்வாம் ஸமுத்பன்னோ மஹாயஶா: |
அஸ்திகஸ் ஸத்யஸந்தே$^{4}$ாமாம் பன்னகேப்யோऽபிரக்ஷது ||

நர்மதைக்குக் காலையிலும் இரவிலும் நமஸ்காரம். நர்மதே உனக்கு நமஸ்காரம். ஸர்ப்பம் தீண்டாமல் ரக்ஷி. ஜரத்காருவுக்கு ஜரத்காருவிடம் உண்டான கீர்த்தியுள்ள அஸ்தீகர் பாம்பினிடமிருந்து ரக்ஷிக்கட்டும். கிழக்கு முகமாக நின்றுகொண்டு

அபஸர்ப ஸர்ப ப$^{4}$த்ரந்தே தூரம் க$^{3}$ச்ச மஹாயஶா: |
ஜனமே ஜயஸ்ய யக்ஞாந்தே அஸ்தீக வசனம் ஸ்மரன் ||

பாம்பே இவ்விடத்தைவிட்டு விலகிச்செல். உனக்கு நன்மைகளுண்டாகும். ஜனமேஜயனுடைய வேள்வியில் அஸ்தீகர் சொல்லிய வசனத்தை நினைத்துக்கொள்.

1. நமஸ்ஸவித்ரே ஜகதே$^{3}$க சக்ஷுஷே
ஜக$^{3}$த்ப்ரஸூதி ஸ்தி$^{2}$திநாஶஹேதவே |
த்ரயீமயாய த்ரிகுணாத்மத$^{4}$ாரிணே
விரிஞ்சி நாராயண ஶங்கராத்மநே ||

---

பிறருக்காக ஒருபாபம் செய்தால் குல்மம்.

உலகிற்குக் கண்ணும், ஸ்ருஷ்டி ஸ்திதி லய காரணமானவரும், வேதரூபியும், முக்குண வடிவனும், மும்மூர்த்தி வடிவனுயுமுள்ள ஸூர்யனுக்கு நமஸ்காரம்.

2\. த்⁴யேய: ஸதா³ ஸவித்ருமண்ட³ல மத்³யவர்த்தி
நாராயண ஸ்ஸரஸிஜா ஸந்நிவிஷ்ட: ।
கேயூரவான் மகர குண்ட³லவான் க்ரீடி ஹாரீ
ஹிரண்மய வபுர்த்⁴ருத ஶங்க சக்ர: ॥

ஸூர்யமண்டலத்திலிருப்பவரும், ப்ரும்மாவிற்கு இருப்பிடமானவரும், ப்ரும்மாவிற்கு இருப்பிடமும், கேயூரம் குண்டலம் க்ரீடம் மாலை முதலியன அணிந்தவரும், ஸ்வர்ணமயமான காந்தி உள்ளவரும் சங்க சக்ரம் தரித்தவருமான நாராயணனை ஸதா நினைக்கிறேன்.

3\. ஶங்க²சக்ர க³தா³பாணே த்³வாரகா நிலயாச்யுத ।
கோவிந்த³ புண்டரீகாக்ஷ ரக்ஷமாம் ஶரணாக³தம் ॥

சங்க சக்ரமணிந்தவரே த்வாரகையிலுள்ளவரே கோவிந்த! தாமரைக்கண்ண ஶரணமடைந்த என்னை ரக்ஷி.

4\. ஆகாஶாத்பதிதம் தோயம் யதா²க³ச்ச²தி ஸாகரம் ।
ஸர்வதே³வ நமஸ்கார: கேஶவம் ப்ரதிக³ச்ச²தி ॥

இவைகளைச் சொல்லி நமஸ்கரிக்கவேண்டும். பிறகு அபிவாதனம் செய்யவேண்டும்.

ஆகாஶத்திலிருந்து விழுந்த ஜலம் கடலை அடைவதுபோல் ஸகல தேவர்களுக்கும் செய்யும் நமஸ்காரம் கேஶவனையே அடைகின்றன.

ஆசமனம் செய்து கையில் தீர்த்தத்தை எடுத்துக்கொண்டு

5\. காயேன வாசா மனஸேந்த்ரியைர்வா புத்³த்³யாத்மனா வா ப்ரக்ருதேஸ் ஸ்வப⁴ாவாத் ।
கரோமி யத்³யத் ஸகலம் பரஸ்மை நாராயணாயேதி
ஸமர்ப்பயாமி ॥ என்று தீர்த்தத்தைக் கீழே விடவும்.

உடல், வாக்கு, மநஸ், இந்த்ரியம், புத்தி, ஆத்மா இவைகளால் ப்ரக்ருதியின் இயற்கையாலும் செய்பவைகளை நாராயணனுக்கே ஸமர்ப்பணம் செய்கிறேன். பிறகு ஜபம்செய்த இடத்தை தீர்த்தத்

---

தால் ப்ரோக்ஷித்து நடுவிரலால் பூமியைத் தொட்டு நெற்றியில் இட்டுக்கொள்ள வேண்டும். அம்மந்திரம் :

**अद्यानो देवसवितः प्रजावत्सावीः सौभगम् । परादुष्वप्नियँ सुव । विश्वानि देवसवितर्दुरितानि परासुव । यद्भद्रं तन्म आसुव ॥**

6. அத்[3]யாநோதே[3]வஸவித: ப்ரஜாவத்ஸாவீ:ஸௌபகம் । பராது[3]ஷ்வப்னியகு[3]ம்ஸுவ । விஶ்வானி தேவஸவித: துரிதானி பராஸுவ । யத்[3]ப[4]த்[3]ரம் தன்ம ஆஸுவ ।

ஓ ஸூர்ய! இக் கர்மாவினால் ஸந்தோஷமடைந்த நீர் புத்ர பௌத்ர பாக்யத்தைத் தாரும். துஸ்வப்பனத்தால் வரும் தோஷத்தை நீக்கும். ஸகல பாபங்களையும் நீக்கி ஸுகத்தைத் தாரும்

**ஸாமவேத ஸந்த்யாவந்தனம் முற்றிற்று.**

---

**குறிப்பு:** அடுத்த இதழில் ஸாமவேத ஸமிதாதானம், ஔபாஸனம் வெளிவரும். ஸாமவேதிகள் தர்ம சிந்தனையுடன் நன்கொடை அளித்தால் ஸந்த்யா ப்ரும்மயக்ஞம், ஔபாஸநம் சேர்த்து தனி புத்தகமாக அச்சிடலாம்.

---

**விசேஷ அறிவிப்பு :** 18 புராணச் சுருக்கம், ஆக்நேய புராணத்திலுள்ள கீதாஸாரம் என்பதை அச்சிட எவரேனும் தந உதவி செய்தால் இலவசமாக வழங்கலாம் எனக் குறித்திருந்தோம். இந்த தர்ம கைங்கர்யத்தை ஓங்கோல், சர்மா காலேஜ் பிரின்ஸ்பால், **ஸ்ரீ V. முத்து அய்யர் அவர்களும், அவரது தர்ம பத்நி ஸ்ரீ M. அம்மாளு அம்மாள் அவர்களும்** தம் அருமைப் புதல்வன் நியாபகார்த்தமாக இந்த இதழில் தனி அநுபந்தமாக வெளியிடச்செய்தார்கள். அவர்கள் புத்ரன் நற்கதிபெறவும், தம்பதிகள் மனஶ்சாந்தியுடன் வாழவும் இறைவனை வேண்டுவோம். நன்றி பல!

18 அத்யாயம் கீதையை நித்யம் பாராயணம் செய்த புண்யத்தை இதைப் பாராயணம்செய்து பெறலாம்.

---

**பார்சுவ சந்திர கிரஹணம் :** (தெரியும்.) மார்ச்சுமீ 24உ செவ்வாய்க்கிழமை இரவு மணி 12-46க்கு ஸ்பர்சம்; மணி 1-41க்கு மத்தியம்; மேற்கே பாகை 13ல் (அதாவது வடக்குக்கு சற்று மேற்கே) மணி 2-37க்கு மோக்ஷம். கிருத்திகை, ரோகிணி, பூரம், உத்திரம், ஹஸ்தம், சித்திரை, உத்திராடம், திருவோணம் நக்ஷத்திரக்காரர்கள் சாந்தி செய்துகொள்ளவும்.

---

**விக்ரஹங்களை உடைத்தால் கர்ப்ப நாஶம்.**

# ஆக்நேய புராணம்.

## யமகீதை.

[வாஜஸ்ரவஸ் என்பவர் யாகம் செய்து எல்லாவற்றையும் தக்ஷிணையாகத் தந்து கிழ பசுக்களையும் தரும்போது அவரது புத்ரனை நசிகேதஸ் என்பவர் என்னை யாருக்குத் தரப்போகிறீர் என்று கேட்க கோபங்கொண்ட தந்தை உன்னை யமனுக்குத் தருகிறேன் என்றார். நசிகேதஸ் உயிருடன் யமனிடம் சென்று தந்தை கோபம் தணிய வரம் பெற்று பற்பல வேதாந்த உபதேசங்களையும் பெற்றார். இது கடோபநிஷத்தில் விரிவாக உளது. யமன் நசிகேதஸுக்கு உபதேசித்த யமகீதை ஆக்நேயபுராணத்தில் 382 அத்யாயம், 37 சுலோகம் உளது. அதன் கருத்தை இங்கு காணலாம்.]

மனிதனது வாழ்வு ஸ்திரமில்லை. எந்த நிமிஷத்தில் இறப்பனோ நிச்சயம் இல்லை. தான் வெகு காலம் ஸ்திரமாக இருக்கப் போவதாக எண்ணி உயர்ந்த ஆஸநம் சிறந்த படுக்கை உத்தம வாஹநம் அழகான வீடு முதலியவைகளைத் தேடுகிறான். என்னே மோஹம்!

போகங்களில் ஆசை வைக்காதே. ஸதா ஆத்ம விசாரம் செய் என்று கபில முநிவர் கூறிய உபதேசம் மனிதர்க்கு மிக்க நன்மை தரும்.

எங்கும் ஒவ்வொரு வஸ்துவினிடமும் பரமாத்மா இருக்கிறார் என்று நினை. என்னுடையது இது என்று எதிலும் பற்று வைக்காதே என்று பஞ்சசிகர் கூறிய உபதேசம் நரர்க்கு நன்மை தரும்.

கருவில் எப்படிக்கஷ்டப்பட்டோம். பிறக்கும்பொழுது எவ்வளவு துன்பம்? மலஜலங்களை வாரி பூசிக்கொண்டு அதையே உண்ணும் குழந்தைப் பருவம் எவ்வளவு ஆபாசமானது. கிழ பருவத்தில் படும் துன்பம் எவ்வளவு? இவைகளை நன்கு யோசி, என கங்கையும் விஷ்ணுவும் கூறிய உபதேசம் நற்கதி ஸாதநமாகும்.

---

**க்ரூரமாகப் பேசினால் இளமையிலேயே வழுக்கைத்தலை.**

ஆத்யாத்மிகம் ஆதிபௌதிகம் ஆதிதைவிகம் என்ற தாபம் மூன்றையும் அகற்ற முயல்வதே நற்கதிக்கு ஸாதநம் என்றார் ஜநகர்.

ஜீவனும் பிரும்மமும் ஒன்றேயாகும். அது வேறு பிரும்மம் வேறு என்ற பேதத்தைக் கல்பிக்கும் புத்தியை அகற்றினால் முக்தி பெறலாம் என்றார் பிரும்மா.

ரிக் யஜுஸ் ஸாம என்ற வேதங்களைக் கொண்டு இது செய்ய வேண்டிய நித்யகர்மா என்று ஶ்ரத்தையுடன் செய்யும் கர்மா முக்தி ஸாதநம் என ஜைகீஷவ்யர் கூறினர்.

லௌகிக வைதிக எனும் ஸகல கர்மாக்களையும் விட்டு பிரும்மத்தை ஸதா த்யாநம் செய்வதே நமக்கு ஆநந்தத்தை அளிக்கக்கூடியது என்று தேவர் உரைத்தார். ஆசையை அறவேவிட்டால்தான் சிறந்த க்ஞாநம் உண்டாகும். அதனால் பரமஸுகமான பிரும்ம ஸ்வரூபம் கிட்டும். ஆசை உள்ளவர்களுக்கு க்ஞானமே உண்டாகாதென ஸநகர் உரைத்தார்.

கர்மாவில் ஈடுபடுபவர் வேதம், செய் என்று கூறிய கர்மாக்களையே செய்யவேண்டும். செய்யாதே என்று தடுத்த கர்மாக்களைச் செய்யக்கூடாது. அடியோடு கர்மாவைவிட்டு க்ஞானத்தில் ஈடுபட்டவர்க்கு மோக்ஷம் உண்டென ஹரி உரைத்தார்.

க்ஞானம் வந்தது என்றால் சிறிதுகூட உலகிலும் பேதமே தோன்றாது. பிரும்மா, விஷ்ணு, சிவன் இவர்களிடம் பேதபுத்தி உண்டாகுமா?

க்ஞாநம், விக்ஞாநம், ஆஸ்திக்யம், நல்ல பாக்யம், அழகு முதலிய ஸகலமும் தவத்தினால்தான் கிடைக்கும். வேறு எது எதை விரும்புகிறார்களோ அவை எல்லாம் பெற வேண்டுமானால் தவம் செய்யவேண்டும்.

விஷ்ணுவுக்கு ஸமமாக தியாநம் செய்யத்தக்க வேறொரு தெய்வமில்லை. உபவாஸத்தை விட சிறந்த தவமில்லை. ஆரோக்யத்திற்கு ஸமமான செல்வம் வேறில்லை. கங்கைக்கு ஸமமான நதியில்லை.

---

**பிறர் பேசுவதுபோல் பரிகாசம் செய்தால் திக்குவாய்.**

# தைத்திரீய உபநிஷத்.

ப்ருகுவல்லி—ஏழாவது அநுவாகம்.

अन्नं ननिन्द्यात् । तद्व्रतम् । प्राणो वा अन्नम् । शरीर मन्नादम् । प्राणे शरीरं प्रतिष्ठितम् । शरीरे प्राणः प्रतिष्ठितः । तदेत दन्न मन्ने प्रतिष्ठितम् ॥

**अन्नं** அன்னத்தை **ननिन्द्यात्** நிந்திக்கக்கூடாது. **तत्**-அது **व्रतं** வ்ரதம் **प्राणः वा** ப்ராணமானது **अन्नम्** சாப்பிடத்தக்க வஸ்து. **शरीरं** உடலானது **अन्नादं** அன்னத்தைச் சாப்பிடுகிறது. **प्राणे** ப்ராணனிடத்தில் **शरीरं** உடலானது **प्रतिष्ठितं** நிலைகொண்டிருக்கிறது. **शरीरे** உடலில் **प्राणः** ப்ராணனனது **प्रतिष्ठितः** நிலைகொண்டுளது. **तत्** அப்படிப்பட்ட **एतत्** இந்த **अन्न** அன்னமானது **अन्ने** அன்னத்தில் **प्रतिष्ठितम्** நிலைகொண்டுளது.

அன்னத்தை ப்ரும்மமென்று உபாஸிப்பவனுக்கு அன்னத்தை நிந்திக்கக்கூடாது என்ற விரதம் உபாஸனைக்கு அங்கமாகும். அதையும் கைக்கொண்டால்தான் முன் கூறிய பலன்கள் உண்டாகும். வேறொரு உபாஸனையைக் கூறுகிறது ஶ்ருதி. நாம் உண்ணும் உணவு ஶரீரத்திலிருப்பதுபோல் ப்ராணனும் உடலில் இருப்பதால் ப்ராணத்தை அன்னமெனக் கருதவேண்டும். உடலை அன்னத்தை உண்ணும் போக்தாவாக நினைக்கவேண்டும். ப்ராணன் இருந்தால்தான் உடல் அழியாமலிருக்கும். ஆதலால் ப்ராணனிடம் உடல் நிலைத்திருக்கிறது. உடலில்தான் ப்ராணன் நிலைத்திருக்கிறது. ப்ராணன் உள்ளேயிருப்பதால் ப்ராணனை அன்னமென்றோம். உடல் அன்னத்தால் உண்டாவதால் உடலையும் அன்னமென்கிறோம்

---

பக்ஷபாதமாகப் பேசினல் பார்ஶ்வாயு உண்டாகும்.

ஆதலால் ப்ராணனெனும் அன்னம் உடலெனும் அன்னத்தில் நிலேத்துளது என உபாஸிக்கவேண்டும்.

स य एतदन्न मन्ने प्रतिष्ठितं वेद प्रतितिष्ठति। अन्नवा नन्ना दो भवति। महा न्भवति प्रजया पशुभि ब्रह्मवर्चसेन। महान्कीर्त्या।

**यः** எவன் **एतत्** இந்த **अन्ने** அன்னத்தில் **प्रतिष्ठितं** நிலேபெற்றுள்ள **अन्नं** அன்னத்தை **वेद** அறிகிருனே **सः प्रतितिष्ठति** ப்ரும்மத்தினிடம் நிலேபெற்றவனுகிருன். **अन्नवान्** அன்னமுள்ளவனுகவும் **अन्नादः** அன்னத்தை உண்ணும் ஶக்தி உள்ளவனுகவும், **भवति** ஆகிருன். **प्रजया** ஸந்ததியாலும் **पशुभिः** பஶுக்களாலும் **ब्रह्मवर्चसेन** ப்ரும்ம வர்ச்சஸ்ஸினுலும் **महान्भवति** சிறந்தவனுகிருன். **कीर्त्या** கிர்த்தியாலும் **महान्** மஹானுக ஆகிருன்.

உடலெனும் அன்னம் ப்ராணன் எனும் அன்னத்தில் நிலேகொண்டிருக்கிறது, என்று உபாஸிப்பவன் அன்னமுள்ளவனுகவும் அதைப் புஜிக்கும் ஶக்தியுள்ளவனுகவும், ஸந்ததி, பஶு, ப்ரும்மவர்ச்சஸ், நற்கிர்த்தி முதலியவைகளால் மிகச்சிறந்தவனுகவும் ஆகிருன்.

கர்மாக்களே நன்கு அனுஷ்டித்து வேதாந்தத்தில் விருப்பமுள்ளவர் இதுபோன்ற உபாஸனேகளேச் செய்து படிப்படியாக ப்ரும்மஸ்வரூபத்தை அடையவேண்டும். இடையிலே இந்த உபாஸனேக்கே இவ்வளவு பலன் உண்டெனக் கூறுகிறது உபநிஷத். மநது ஏகாக்ரப்பட உபாஸனேகள் ஒரு சிறந்த ஸாதனமாம்.

ஏழாவது அநுவாகம் முற்றிற்று.

---

### 8-வது அநுவாகம்.

अन्नं न परिचक्षीत । तद्व्रतं । आपो वा अन्नं । ज्योति रन्नादम् । अप्सु ज्योतिः प्रतिष्ठितम् । ज्योतिष्यापः प्रतिष्ठिताः । तदेत दन्न मन्ने प्रतिष्ठितम् ।

**अन्नं** அன்னத்தை **न परिचक्षीत** நிராகரிக்கக்கூடாது. **तत्** அது **व्रतं** கடமை. **आपो वा** ஜலமே **अन्नं** அன்னமாம். **ज्योतिः** தேஜஸ்ஸானது **अन्नादं** அன்னத்தைச் சாப்பிடுகிறது. **अप्सु** ஜலத்தில் **ज्योतिः** தேஜஸ்ஸானது **प्रतिष्ठितं** நிலைத்திருக்கிறது. **ज्योतिषि** தேஜஸ்ஸில் **आपः** ஜலம் **प्रतिष्ठिताः** நிலைபெற்றிருக்கிறது. **तत्** அப்படிப்பட்ட **एतत्** இந்த **अन्नं** அன்னமானது **अन्ने** அந்நத்தில் **प्रतिष्ठितं** நிலைபெற்றுளது.

முன் சொன்னதுபோல் மற்ருேர் உபாஸநம் கூறப்படுகிறது. உபாஸகன் அன்னத்தை நிராகரிக்கக் கூடாது. (இலையைச்சுற்றி நான்கு புறமும் எரைக்கவும் கூடாது.) அது உபாஸகனது கடமையாகும். ஜலத்தை அன்னமாகக் கருதவேண்டும். அதை அருந்துவதால் அது அன்னமாம். அக்நியால் நீர் ஜீர்ணம் செய்யப்படுவதால் அக்நி அன்னத்தைச் சாப்பிடுவதுபோலாகும். நீர் அன்னம்—தி அன்னுதம். மேகத்திலுள்ள நீரில் மின்னல் வடிவமாக அக்நி இருப்பதால் நீரில் ஜோதிஸ் நிலைபெற்றதாகும். தேஹத்திலுள்ள அக்நி தாபத்தால் வியர்வை உண்டாவதால் அக்நியில் ஜலம் இருக்கிறது எனப்பட்டது. ஜலத்தில் அக்நியும் அக்நியில் ஜலமும் இருப்பதால் அன்னம் அன்னத்தில் நிலைபெற்றதாகும்.

स य एत दन्न मन्ने प्रतिष्ठितं वेद प्रतितिष्ठति । अन्नेवानन्नादो भवति । महान्भवति प्रजया पशुभि र्ब्रह्म वर्चसेन महान्कीर्त्या ।

---

**यः** எவன் **एतत्** இந்த **अन्नं** அன்னமானது **अन्ने** அன்னத்தில் **प्रतिष्ठितं** நிலைபெற்றிருப்பதை **वेद** அறிகிருனோ **सः** அவன் **प्रतितिष्ठति** ப்ரதிஷ்டை அடைகிருன். **अन्नवान्** அன்னமுள்ளவனுகவும் **अन्नादः** அன்னத்தைச் சாப்பிடக் கூடியவனுகவும் **भवति** ஆகிருன். **प्रजया** ஸந்ததியாலும் **पशुभिः** பசுக்களாலும் **ब्रह्मवर्चसेन** ப்ரும்மவர்ச்சஸ்ஸினுலும் **महान्भवति** நிறைந்தவனுகிருன். **कीर्त्या** கீர்த்தியாலும் **महान्** மஹானுக ஆகிருன்.

அன்னத்தில் அன்னம் ப்ரதிஷ்டை உள்ளது என்பதை எவன் அறிகிருனோ அவன் ப்ரதிஷ்டை உள்ளவனுகிருன். அன்னம் உள்ளவனுகவும் அன்னத்தைப் புஜித்து ஜீர்ணம் செய்துகொள்பவனுகவும், ஸத் ஸந்ததி, பசு, ப்ரும்மவர்ச்சஸ், கீர்த்தி இவைகளால் பூர்ணனுகவும் ஆகிருன் என அதை அறிந்தவனுக்குப் பலன் கூறப்பட்டது.

எட்டாவது அநுவாகம் முற்றிற்று.

---



---

வெண்கலம் திருடினுல் வெண்குஷ்டம்.

# பால பாரதம்.

விராட பர்வா — (மாசிமீ தொடர்ச்சி)

கே: ஓ ஹோ! மரத்தாலடிக்காதே. அழுத்தி அடித்துக் கொல் என்று பொருள் போலிருக்கிறது. உடனே அங்கேயே அப்படிக்கொல்ல ஆரம்பித்துவிட்டானு?

ப: அதற்கு இடமளிக்காமல் மிக ஸாமர்த்தியமாக தர்மர், வலல! இது பச்சை நிழல்மரம். காட்டிற்கு போய் வேறு மரத்தை எடுத்துக்கொள். உன் உள்ளமறிவோம். என்று வாயால் கூறி காலால் அந்த ஸம்க்ஞையைக் காட்டினுர்.

கே: காட்டில் எங்கேனும் சென்று ரஹஸ்யமாக அவனைக் கொல் என்று அதன் பொருளா? பிறகு என்ன நடந்தது?

ப: பீமன் அமர்ந்தான். திரௌபதி புலம்பினுள். இது ஸபையா? இங்கே தர்மம் கூறுபவர் எவரும் இல்லையா என்ருள்.

கே: தர்மர் அல்லது அமைச்சர்களேனும் கீசகனைச் சிக்ஷிக்கும்படி கூறக்கூடாதா என்பது அவள் கருத்து போலும். எவரும் அவளுக்கு ஆதரவாகப் பேச முன் வரவில்லையா?

ப: தர்மர்தான் எழுந்தார். ஸைரந்திரி! உனது கணவர்களான கந்தர்வர் கவனிக்க மாட்டார்களா? நீ ஏன் ஆட்டக்காரிபோல் கத்துகிருய் என்ருர்.

கே: அவள் துக்கம் இன்னும் அதிகமாகி இருக்கும். என்ன செய்தாள்?

ப: ஆட்டக்காரர் மனைவி ஆட்டக்காரிதானே என்று கூறி அரண்மனைக்குச் சென்ருள்.

கே: ராணி ஏதேனும் ஸமாதானம் செய்தாளா?

ப: ஸைரந்த்ரி, யார் உன்னைத் துன்பப்படுத்தியது? அரசனிடம் கூறி அவனைச் சிக்ஷிக்கிறேன் கூறு என்ருள்.

கே: ஸைரந்த்ரி கூறிய பதிலென்ன?

---

அரக்கு திருடுபவர் செம்மட்டை மயிர்.

ப: அம்மா கண்ணைக் குத்திவிட்டு ஏனழுகிறாய் என கேட்கிறீர்கள்! தாங்கள் சிக்ஷிக்க வேண்டாம். முன் கூறியபடி எனது பதி கொல்வார். இப்பொழுதே உமது ஸஹோதரனுக்குச் செய்ய வேண்டியதைச் செய்துவிடும் என்றாள்.

கே: பிறகு என்ன நடந்தது?

ப: மறுபடியும் கீசகன் தன்னை உபத்ரவிக்காமலிருக்க உடனே அவனைக் கொல்லவேண்டும். இல்லையேல் நான் இறப்பேன் என த்ரௌபதி பீமனிடம்முறையிட்டாள்.

கே: இதைக்கண்டால் த்ரௌபதியின் கணவன் என விராட நகரத்தவர் அறியக்கூடுமே?

ப: அதற்காகத்தான் இரவில் ஒருவரும் அறியாதபடி பீமஸேனனிடம் சென்று கூறினாள்.

கே: பீமஸேனன் என்ன ஸமாதானம் சொன்னான்?

ப: மறுபடியும் கீசகனை ஸந்தித்து இரவில் ஒருவரும் அறியாதபடி ஏகாந்தமான நர்தனசாலைக்கு வரும்படியும் தானும் ஒருவரும் அறியாதபடி அங்கே முன்னதாக வந்து காத்துக்கொண்டிருப்பதாகவும் சொல்லச்சொன்னான்.

கே: த்ரௌபதி இதைக்கூற எப்படி கீசகனிடம் அணுகினாள்?

ப: இவள் செல்ல வேண்டுமா? வெட்கமும் அச்சமுமில்லாத கீசகன் மறுபடியும் அவளைத்தேடி வந்து அவள் காலில் விழுந்து தன்னை ஏற்கும்படி வேண்டினான்.

கே: விதி பலமுள்ளது! தானே யமனைத்தேடிச் சென்றானே! பீமன் சொல்லை அவள் மூலமாகக் கேட்டவுடன் அங்ஙனமே ஏகாந்தமான இடத்திற்குச் சென்று இருப்பான். பீமன் எப்படி வந்தான்?

ப: இரவு இருளில் பீமஸேனன் ஒருவரும் அறியாமல் தன் உடலை மூடிக்கொண்டு நர்தன சாலையிலுள்ள படுக்கையில் படுத்திருந்தான். த்ரௌபதியும் அவனருகே வந்து காத்திருந்தாள்.

---

# சாந்தி விலாஸம்.

(கணபதி தீக்ஷிதர்.)

21. आयान्त्यग्रे ननुतनुभवा उत्तमर्णा इवैते
शय्यालग्नाः फणभृत इवाभान्ति दारा इदानीम् ।
कारागेह प्रतिम मधुना मन्दिरं दृश्यतेमे
तत्र स्थातुं प्रसजति मनो नक्षणं न क्षणार्धम् ॥

ஆயாந்த்யக்$^{3}$ரே நநுதநுப$^{4}$வா உத்தமர்ணை இவைதே
ஶய்யாலக்$^{3}$னை: ப$^{2}$ணப்$^{4}$ருத இவாபாந்தி த$^{3}$ாரா இத$^{3}$ாநீம் |
காராகே$^{3}$ஹப்ரதிம மது$^{4}$நா மந்திரம் த்$^{3}$ருஶ்யதே மே
தத்ரஸ்த$^{2}$ாதும் ப்ரஸஜதி மனோ நக்ஷணம் நக்ஷணார்த$^{4}$ம் ||

நல்ல வைராக்யம் உண்டாகி, எதிரில் வரும் புத்ரன் கடன் காரன்போலும், மனைவி படுக்கையில் உள்ள ஸர்ப்பம்போலும், வீடு சிறைச்சாலைபோலும் தோன்றி அங்கே ஒரு க்ஷணமோ அரை க்ஷணமோ வஸிக்க விருப்பமில்லாமலிருக்கவேண்டும். இறைவனருளால் வைராக்யமுண்டானல் இந்த எண்ணமுண்டாகும்.

22. जातं जातं गतमपिगतं बाल्यतो लौल्यतो वा
नात्रस्थेयं क्षणमपि गृहे मुञ्चतः कोमुहूर्तः ।
इत्यत्यन्त व्यवसित धियोनिस्सरन्तोऽपि गेहा
दावर्तन्ते झटिति रुदतां सान्त्वहेतोः शिशूनाम् ॥

ஜாதம் ஜாதம் க$^{3}$தமபிகதம் ப$^{3}$ால்யதோ லௌல்யதோவா
நாத்ரஸ்தே$^{2}$யம் க்ஷணமபிக்$^{3}$ருஹே முஞ்சத: கோமுஹூர்த:
இத்யத்யந்த வ்யவஸிததி$^{4}$யோ நிஸ்ஸரந்த்தோபிகேஹாத்
ஆவர்தந்தே ஜ$^{4}$டிதிருத$^{3}$தாம் ஸாந்த்வஹேதோ: ஶிஶூநாம்.

இளமையினலோ, சஞ்சல சித்தத்தினலோ வந்தது வந்து விட்டது. போனது போயிற்று. இனி க்ஷணம்கூட வீட்டிலிருக்கக்கூடாது. வீட்டை விட்டுச் செல்ல முகூர்த்தமென்ன? இப்படி நன்றாக நிச்சயம் செய்து வீட்டிலிருந்து சென்றாலும், ஐயோ! அப்பா! எங்களை விட்டுவிட்டுப் போகிறாயே என அழும் குழந்தைகளை ஸமாதானப்படுத்தத் திரும்பி வருகிறார்களே. அப்படி இல்லாமல் செய் என்னை ப்ரபோ.

---

நெய் திருடினல் கண் நோய் உண்டாகும்.

23. नैवब्रूमो वयमतिथयोऽभ्यागता बन्धुवर्गाः
दीना नाथा स्सुहृद इतिये तेषुकार्या दयेति ।
यंत्वं पोष्यं मनसि कुरुषे नित्यमात्मानमेकं
जन्मन्यस्मिन्निव बिभृहितं सर्वदेत्युल्लपामः ॥

நைவப்[3]ரூமோ வயமதித[2]யோ ப்[4]யாக[3]தாப[3]ந்துவர்க[3]ா:
தீநாநாத[2]ாஸ்ஸுஹ்ருத இதியே தேஷுகார்யா தயேதி ।
யம்த்வம் போஷ்யம் மநஸிகுருஷே நித்ய மாத்மானமேகம்
ஜந்மந்யஸ்மின்னிவபி[3]ப்ரு[4]ஹிதம் ஸர்வதேத்யுல்லபாம:

விருந்தாளி அழைத்து வந்தவர், பந்து வர்க்கம், ஏழை அனாதை, நண்பன் ஆகிய இவர்களிடம் தயை காட்டி ரக்ஷிக்க வேண்டுமெனக் கூறவில்லை. ஆனால் எந்த உன்னையே போஷிக்க வேண்டுமென மனதில் நினைக்கின்றாயோ அந்த உன்னை நீ அடுத்த பிறவியிலும் இப்போது காப்பதுபோல் காப்பாற்று என்றே கூறுகிறோம். நீ மறு பிறவியிலும் நன்றாக இருக்கவேண்டுமானால் முன் கூறிய எல்லோரையும் ரக்ஷி.

24. कोनुव्यासः कइवसमनुः कोन्वसौ याज्ञवल्क्यः
यैरुद्धुष्टं हितमसकृदस्मासु पितेव पुत्रे ।
पश्यामस्तान्निरुपधि कृपासागरा न्लोकबन्धून्
पश्यामोऽस्मान्निरवधितमः क्ष्माधरा न्ब्रह्मबन्धून् ॥

கோநுவ்யாஸ: க இவஸமநு: கோந்வஸௌ யாக்ஞவல்க்ய:
யைருத்குஷ்டம் ஹிதமஸக்ருதஸ்மாஸுபித்ரேவபுத்ரே ।
பஶ்யாமஸ்தாந் நிருபதி[4] க்ருபாஸாகரான் லோகப[3]ந்தூ[4]ந்
பஶ்யாமோ ஸ்மாந் நிரவதி[4]தம: க்ஷ்மாத[4]ரான்
ப்[3]ரஹ்மபந்தூ[4]ந் ॥

யார் இந்த வ்யாஸர்? இந்த மநு யார்? யாக்ஞவல்க்யர்தான் யார்? என்னென்னமோ கஷ்டமான கர்மாக்களை எழுதிவைத்தார்களே என அவர்களை அவக்ஷ்யம் செய்யாதே. நிந்திக்காதே. தந்தை புத்ரனுக்கு செய்வதுபோல் நமக்கு ஹிதம் கூறினார்கள். எல்லையில்லாக் கருணைக்கடல் போன்றவர். லோக பந்து. அவர்களைத் தப்பாக எண்ணுபவன் இருள் மலை. அதமன் ஆவான்.

---

**தோலைத் திருடினால் கருமேகம்.**

# பங்குனிமாத கோசார பலன்.

ஜோதிஷபானு, E. S. K. ஸ்வாமி,
பாரத் கிரஹ ஸஞ்சார ஆசிரியர்.

[பாரத் கிரஹ ஸஞ்சாரம்: மாதாந்திர தமிழ் ஜோதிஷப் பத்திரிகை. 48 பக்கம். வருட சந்தா ரூ. 6. 17, தேவடிதெரு, மைலை.]

## மேஷ ராசி

*அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய*

குரு அஷ்டமத்திலும், சனி பாக்கியத்திலும், ராகு ஆறிலும், கேது விரயத்திலும் இருக்கிறார்கள். இதனால் எந்த காரியங்களிலும் தவக்கம் ஏற்பட்டுகூடும். சுபவிஷயங்களில் செலவு செய்ய நேரும். வெளியூர் போய்வர நேரும். சிலருக்கு தேகசுகம் ஸாமான்யமாய் பாதித்துக் குணமாகும். பிறர் சகாயத்தால் காரியானுகூலம் ஏற்படும். வரவுக்கு மிஞ்சிய செலவுகள் ஏற்படும். பிரதி வியாழக்கிழமையிலும் ஒருவருக்கு அன்னம் போடுவதால் அனுகூலம் பலன் ஏற்படும்.

## ரிஷப ராசி

*கிருத் 2ம் பாதம் முதல் ரோகிணி மிருகசீரிஷம் 2ம் பாதம் முடிய.*

குரு ஏழிலும், சனி அஷ்டமத்திலும், ராகு பஞ்சமத்திலும், கேது லாபத்திலுமிருக்கிறார்கள். சூரியன் லாபராசியில் இருக்கிறார். இதனால், முயற்சிகள் கைகூடிவரும். செய்தொழிலில் நன்மையும், முன்னேற்றத்திற்கான சூழ்நிலைகளும் ஏற்பட்டுவரும். பெரிய மனுஷ்யர்கள் ஆதரவு ஏற்படும். அலைச்சல் காரியங்களில் ஈடுபடும்படியாகும். சுபவிஷயங்களில் சிலருக்கு ஏற்பாடுகள் உண்டாகும். சில பொருள் வாங்க நேரும். சனிக்கு நவக்ரக ஹோமம் செய்ய நன்மையாம்.

## மிதுன ராசி

*மிருக. 3ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்வசு 3ம்பாதம் முடிய.*

குரு ஆறிலும், சனி ஸப்தமத்திலும், ராகு நான்கிலும், கேது ராஜ்ய ஸ்தானத்திலும், சூரியன் ஜீவனத்திலும் இருக்கிறார்கள். இதனால் உத்தியோகத்தில் நன்மை உண்டாகும். ராஜாங்க முயற்சிகள் கைகூடும். வெளியூர் போய்வரும் அலைச்சல் ஏற்படும். புதிய நபர்களின் சிநேகமும் உதவியும் ஏற்படும். சிலருக்கு புதிய வகையில் உத்தியோகம் மாறும். அல்லது வேலை கிடைக்கும். வியாபாரம் ஒழுங்குபடும். லாபகரம் ஏற்படும். சுப்ரமண்ய ஸ்வாமிக்குப் பிரதி செவ்வாயிலும் அர்ச்சனை செய்வது நன்மை.

## கடக ராசி

*புனர்வசு 4ம் பாதம் முதல் புஷ்யம் ஆயில்யம் முடிய*

குரு பஞ்சமத்திலும், சனி ஆறிலும், ராகு மூன்றிலும், கேது பாக்கியத்திலும் இருக்கிறார்கள். சூரியன் பாக்கியத்தில் இருக்கிறார். இதனால் பழைய நடப்பில் சீர்திருத்தம் ஏற்படும். குடும்ப சௌக்கியமுண்டாகும். தொழில் சுகம் ஏற்படும். சிலருக்கு வருமானம் கூடும். அதிகாரியால் நன்மை ஏற்படும். புதியவகை முன்னேற்றம் உண்டாகும். சுபமுயற்சிகள் கூடிவரும். சாதுக்களை தரிசிப்பதால் மனதிற்குத் திருப்தி ஏற்பட்டுவரும்.

---

இரும்பைத் திருடினால் குஷ்டரோகம்.

## சிம்ம ராசி

### மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய

குரு நான்கிலும், சனி பஞ்சமத்திலும், ராகு இரண்டிலும், கேது எட்டிலும், சூரியன் எட்டிலும் இருக்கிறார்கள். செய்தொழிலில் சிரமம் அதிகமாகும். குடும்ப செலவுகள் அதிகமாகும். சிலருடன் விவாதமும், கவலையும் ஏற்படும். சமநிலை வருமானம் இப்படி ஏற்படும். பிறர் சகாயம் உண்டாகும். வெளியூரிலிருந்து நல்ல சேதி கேள்விப்படும்படியாகும். வரவேண்டிய பணம் தடைப்பட்டுவரும். பிரதி ஞாயிறிலும் பாம்புப்புத்தில் அரை ஆழாக்கு பசும்பால் விட்டுவருவது நன்மை.

## கன்னியா ராசி

### உத்திரம் 2ம் பாதம் முதல் ஹஸ்தம் சித்திரை 2ம் பாதம் முடிய.

குரு மூன்றிலும், சனி நான்கிலும், ராகு ராசியிலும் கேது ஏழிலும், சூரியன் ஏழிலும் இருக்கிறார்கள். இதனால் ராஜாங்கமூலமாய் சில கவலைகள் உண்டாகும். செய்தொழிலில் சில நிர்ப்பந்தம் ஏற்படும். சிலருக்கு இடம் மாறுவதற்கான சிந்தனைகள் ஏற்படும். அடிமை ஆட்களால் வருத்தம் உண்டாகும். ஆரோக்ய ஸம்பந்தமாய் கவலையும், குடும்ப செலவுகள் அதிகரித்து வருவதும் உண்டாகும். சிலரை நம்பி ஏமாற்றம் ஏற்படும். பிரதி சனிவாரமும் சனீஸ்சரருக்கு அர்ச்சனை செய்துவருவது நன்மை.

## துலா ராசி

### சித். 3ம் பாதம் முதல் சுவாதி விசாகம் 3ம் பாதம் முடிய

குரு இரண்டிலும், சனி மூன்றிலும், ராகு விரயத்திலும், கேது ஆறிலும், சூரியன் ஆறிலும் இருக்கிறார்கள். இதனால், செய்தொழிலில் புதிய ஏற்பாடுகள் உண்டாகும். சினேக ஆதரவு ஏற்படும். செய்காரியங்களில் துணிச்சல் ஏற்படும். குடும்ப சௌக்யமும், சுபமுயற்சிகள் கூடிவருவதும் உண்டாகும். பிறர் சகாயம் ஏற்பட்டு முன்னேற்றம் உண்டாவதாகும். ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமம் செய்வதால் குடும்ப நன்மை உண்டாகும்.

## விருச்சிக ராசி

### விசாகம் 4ம் பாதம் முதல் அனுஷம் கேட்டை முடிய

குரு ஜன்மத்திலும், சனி தனத்திலும், ராகு பஞ்சமத்திலும், கேது லாபத்திலும், சூரியன் பஞ்சமத்திலும் இருக்கிறார்கள். இதனால் சிலருக்கு இடமாற்றம் அல்லது தொழில் மாற்றம் ஏற்படும். ஆரோக்ய விஷயமான செலவுகள் அதிகமாகும். பிறர் உதவியால் புதியவகையில் தொழில் விருத்தி ஏற்படும். வெளியூர் போய்வரும்படியாகும். சில பொருள் விற்கும்படியாகும். சுபமுயற்சிகள் உண்டாகும். மகாவிஷ்ணுவுக்கு அபிஷேக ஆராதனை செய்வது நலம்.

## தனுர் ராசி

### மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய

குரு விரயத்திலும், சனி ராசியிலும், ராகு பத்திலும், கேது நான்கிலும் இருக்கிறார்கள். சூரியன் நான்கிலும் இருக்கிறார். இதனால் செய்காரியங்களில் தவக்கமும், சோர்வும் ஏற்படும். குடும்ப செலவுகள் அதிகமாகும். குடும்ப நடப்பில் சில சச்சரவுகள் ஏற்படும். சிலருக்கு வெளியூர் போய் வருதல், அல்லது இடமாற்றம் உண்டாகும். சகவாசத்தால் கிலேசம் ஏற்படும். வருமானம் வந்தும் நிம்மதியிராது. பிரதி சனிக்கிழமையிலும் ஓர் ஏழைக்கு அன்னமளித்து, ஷி கோவிலில் விளக்கு போட்டுவரவும்.

---

### மகர ராசி

உத்திரா. 2ம் பாதம் முதல் திருவோணம் அவிட். 2ம் பாதம் முடிய

குரு லாபத்திலும், சனி விரயத்திலும், ராகு பாக்கியத்திலும், கேது மூன்றிலும், சூரியன் மூன்றிலுமிருக்கிறார்கள். இதனால் அவசியமில்லாத காரியங்களில் ஈடுபட்டு வீண் செலவுகள் உண்டாகும். மனதிற்கு நிம்மதி குறையும். வீண் செலவுகள் அதிகமாகும். சிலருக்கு இருப்பிடம் மாறும். குடும்பத்தில் கவலையும் வேதனையும் ஏற்படும். மறைமுகமான தூஷணைகளும், சிலரிடம் பகையும், செய் தொழிலில் திருப்திக் குறைவும் ஏற்பட்டுவரும். நவக்கிரக சாந்தி செய்தால் வேதனை விலகும். துர்க்கா ஜபம் செய்வது நலமாம்.

### கும்ப ராசி

அவிட்டம் 3ம் பாதம் முதல் சதயம் பூரட். 3ம் பாதம் முடிய

குரு பத்திலும், சனி லாபத்திலும், ராகு எட்டிலும், கேது இரண்டிலும் இருக்கிறார்கள். சூரியன் தனத்தில் இருக்கிறார். இதனால் ராஜாங்க மூலமாய் வீண் செலவுகள் ஏற்படும். அலைச்சல் காரியங்களும், பிரயாணம் போய்வருதலும் உண்டாகும். சுபவிஷயமாயும், புண்ணிய காரியங்களிலும் செலவுகள் உண்டாகும். தேகசுகம் சிறிது பாதித்து குணமாகும். பெரிய மனுஷ்யர்களின் ஆதரவும், நேசவிருத்தியும் ஏற்படும். கோவுக்கு பூஜை செய்துவிஷ்ணு மந்த்ர ஜபம்செய்ய வேதனை நீங்கும்.

### மீன ராசி

பூரட்டாதி 4ம் பாதம் முதல் உத்திரட்டாதி ரேவதி முடிய

குரு பாக்கியத்திலும், சனி பத்திலும், ராகு ஏழிலும், கேதுவும், சூரியனும் ராசியிலுமிருக்கிறார்கள். இதனால் செய்காரியங்களில் நன்மை ஏற்பட்டுவரும். குடும்ப நடப்பில் திருப்திக்குறைவும் ஏற்படும். ராஜாங்க மூல்யமாய் சில கிலேசங்கள் ஏற்படும். வீண்வகையில் செலவுகள் ஏற்படும். சுபமுயற்சிகள் உண்டாகும். சுபவிரயமும் ஏற்படும். பெரியோர் நேசமும், ஆதரவும், சிலபொருள் விற்கும்படியாகவும் உண்டாகும். அடிமையாட்களால் சிறிது கிலேசமும் ஏற்படுவதாகும். வெள்ளியில் நாகம் வாங்கி பசும்பால் அபிஷேகமும், பால் நிவேதனமும் செய்தால் சிக்கல் நீங்கிவரும்.

---

## பங்குனிமாத விசேஷ விரதம்.

[இம்மாத மஹாத்ம்யம் பவிஷ்யோத்ர புராணத்தில் 40 அத்யாயம் உளது. துலாஸ்நாநம் போல் இதிலும் ஸ்நாந தாநாதிகளின் பெருமை, கதைகள் மூலம் கூறப்படுகிறது. உபபுராண வெளியீட்டில் இதையும் வெளியிட உத்தேசம்.]

**காமாக்ஷி பூஜை அல்லது காரடை நோம்பு:** சிவனிடம் அபசாரப்பட்டு அது அகல தேவி காஞ்சியில் தவம்செய்த கதை ப்ரஸித்தம். அதை அநுஸரித்து மாசியும் பங்குனியும் கூடும் ஸமயம் இந்த நோம்பு செய்யவேண்டும். [இந்த பூஜாவிதி, சித்ரகுப்த, ஸ்ரீ ராமநவமி பூஜைகளுடன் மாம்பலம் குருகுலத்தில் 33 ந. பை. ஸ்டாம்பு அனுப்பிப் பெறலாம்.]

---

*அரிசி திருடுபவர் பல் வலியால் வருந்துவர்.*

**27உ ஸ்ரீராம நவமி ஆரம்பம்:** *கர்போத்ஸவமாகச் செய்பவர் அன்றுமுதல் ஆரம்பித்து நவமியில் பூர்த்திசெய்யவேண்டும். 9நாட்களில் ஸ்ரீராமாயண பாராயணம் அல்லது ஸுந்தர காண்டமாவது பாராயணம் செய்து முடிப்பது நற்பலனைத் தரும்.*

---

## தார்மிகச் செய்திகள்.

**ஒரு சிறந்த கார்யம்:** இந்திய அரசாங்கம், கவிகுல திலகமான காளிதாஸனுக்குச் சிறந்த நியாபகச்சின்னம் ஒன்று அமைக்கக் கருதி ராஜ்ய அரசாங்கங்களின் அபிப்ராயத்தைக் கேட்டது. சென்னை அரசாங்கமும் அதை ஆதரித்தது மிகமிகக் கொண்டாடத்தக்க விஷயமாம்.

**வேத தர்ம சாஸ்த்ர பரிபாலந ஸம்மேளநம்:** 5 நாள் வில்லிவாக்கத்தில் நடந்து 1உ பூர்த்தியானது. வழக்கப்படி வைதிக கர்மாபற்றி பலர் பேசினர். தர்ம கார்யத்தில் தாராளமாக தாநம் செய்யும் வெல்லமண்டி ஸ்ரீ நடேசய்யர் செய்த அன்னதானமும் வித்வத் ஸந்மானமும் மிகக் கொண்டாடத்தக்கது.

**ஆங்கில கவிக்கு ஜகத்குரு தர்சநம்:** 'பகலில் இருள்' எனும் அரிய நூலை எழுதிய கொய்ஸ்டர் என்ற ஆங்கில கவி ஸ்ரீகாமகோடி பீட ஜகத்குருவை தர்சித்து பல விஷயங்களைக் கேட்டு ஆநந்தித்தார்.

**அரிய உபன்யாஸம்:** *8—2—1959*ல் ஸ்ரீ ஜகத்குரு தர்மகைங்கர்யம் செய்யும் அனைவரையும் அழைத்து மைலாப்பூர் ஸம்ஸ்க்ருத காலேஜில் நீண்டதோர் உபன்யாஸம் செய்தார்கள். சென்னையிலுள்ள பத்திரிகை ஆசிரியர்கள் அனைவரும் ஓர் அபிநந்தனப் பத்திரம் படித்து காணிக்கையாக இரண்டு வெள்ளிப் பாத்திரங்களை யளித்தார்கள். அவர்களனைவர்க்கும் செய்த அருமையான உபன்யாஸத்தை மற்றோர் பகுதியில் காணலாம்.

**பீஷ்ம ஜயந்தி:** திருவல்லிக்கேணி தர்ம ஸேவா ஸங்கத்தில் ஒரு வாரம் வைதீக முறையில் பீஷ்மஜயந்தி கொண்டாடப்பட்டது. 8உ நமது ஆசிரியர் பீஷ்ம ஜனனம் பற்றி விரிவாகக் கூறி வ்யாஸாவதார தினத்தையும் கொண்டாடும்படிக் கூறினர்.

**அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம்:** *சீர்காழிக்கு கீழ்பாலுள்ள* கடவாசலில் முன்னோர்களால் பரிபாலிக்கப்பட்டுவந்த ஸ்ரீ வரதராஜஸ்வாமி ஆலயம் அவ்வூர் கிராமவாசிகளால் புதுப்பிக்கப்பட்டு விளம்பி௵ தைமீ 29உ தேரழந்தூர் ஸ்ரீ சந்தான பட்டாசாரியார் சுவாமிகளால் ஐந்து கால பூரண ஆகுதி ஹோமங்களுடனும், வேதபாராயணங்களுடனும் அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம் நடந்தேறியது. அதுசமயம் சென்னை ஸ்ரீவத்ஸ சோமதேவ சர்மா அவர்களின் புத்ரர் ஸ்ரீ ஜயராமன், கும்பாபிஷேகம் செய்யவேண்டியதின் அவசியம் பற்றியும், நாராயணீய உபன்யாஸமும், மாலை சென்னை ஸ்ரீமூலநாத சர்மாவின் ஸ்ரீ ருக்மணிகல்யாண உபன்யாஸமும், இரவு ஸ்வாமி புறப்பாடும் இனிது நடந்தேறியது. கிராம முன்சீப், ஸ்ரீ A. கிருஷ்ணமூர்த்தி அய்யரும், ஸ்ரீ A. வெங்கட்ராமனும் முன்னின்று நடத்தினர்.

**இலவச வெளியீடு:** ஸ்ரீ காஞ்சி காமகோடி மடம், ஸ்ரீ அஹோபில மடம், உடுப்பி பஜவார் மடம், மதுரை ஸ்ரீ திருக்ஞாந ஸம்மந்தர் ஆதீநம் இந் நான்கு மடங்களின் ஆதரவு பெற்று தெய்வ பக்தியும் சமயவழிபாடும் என்ற தமிழ் துண்டு ப்ரசுரம், 175 A, லாயிட்ஸ் ரோட், சென்னை என்ற விலாஸத்தில் இலவசமாகக் கிடைக்கும்.

---

**கோவில் சொத்தைக் கவர்ந்தால் நாக்கு நோய்.**

# ஹாலாஸ்ய மஹிமை.

**சிவன் கிழவனுகி குமரனுக ஆனுர்.** (மாசி மாதத் தொடர்ச்சி.)

வைஷ்ணவ பிரும்மசாரி மணம் முடிந்ததும் கௌரியுடன் பெற்றோரிடம் சென்றுன். மருமகளின் சிவ சின்னத்தைக் கண்டு வெருப்புகொண்டு அவளைத் தனியாக வைத்தனர் அவளது மாமன், மாமி. அவர்கள் ஒருநாள் வெளியூர் சென்றனர்.

ஏகாந்தமாயுள்ள கௌரி சிவபக்திக்கு இடஞ்சல் செய்கின்றனரே, என்ன செய்வதென பல எண்ணமிட்டு ஏங்கிக்கொண்டிருந்தாள். பகவான் கிழ வேஷம் பூண்டு பசி என்று அவளிடம் வந்தார். என்செய்வாள்? எல்லாவற்றையும் வீட்டில் வைத்துப் பூட்டிக்கொண்டு சென்றுள் மாமி. ஐயோ! என்செய்வேன்? ஶிவனே போல் வந்த வேதியருக்கு எப்படி உணவளிப்பது? என ஏங்கினுள். பெண்ணே பூட்டைத்தொடு. அது திறக்குமென்ருர் கிழவர். அங்ஙனமே அது திறக்க உட்சென்று அறுசுவை அன்னம் ஆக்கி அளித்தாள். வயிருர உண்டவயோதிகர் மன்மதனை ஒத்த இளங் காளையாகத் தோன்றினுர்.

ஐயோ! என்செய்வேன் என அஞ்சி ஒதுங்கி நின்ருள் கௌரி. வெளியிற்சென்ற மாமன், மாமி வரும் குரல் கேட்டது. ஐயோ என்செய்வேன்? அவர்கள் என்னைச் சைவப்பெண் என்பதற்காகவே வெறுத்தனர். ஒரு இளைஞருடன் தனியாயிருப்பதைக் கண்டு கற்பிலும் ஐயங்கொள்வரே என அலறினுள். அடுத்த க்ஷணத்தில் இளங்காளை சிறு குழந்தையானுர். உட்புகுந்த மாமன் மாமி இது யார்? என கடுங் கோபத்துடன் வினவினர். தேவதத்தன் மனைவி வந்து குழந்தையை விட்டு விட்டு வெளியிற் சென்ருள் என்ருள். இதைக் கேட்டு சினங்கொண்ட அவர்கள் குழந்தையுடன் மருமகளை வீட்டை விட்டு விரட்டினர். ஐயோ! என் செய்வேன்? இது ஈசன் திருவிளையாடலோ? என சிந்தை நொந்தாள் கௌரி.

---

**அன்னிய ஸ்த்ரீ புருஷகமநம் செய்தவர் நபும்ஸகர்.**

உடனே குழந்தை விருஷபாரூடரான பரமசிவனுகி கௌரியைப் பார்வதியிடம் லயப்படுத்திக் கொண்டு மறைந்தார்.

## கால் மாறிய நடனக் காக்ஷி.

விக்ரமன் தன் மகனை ராஜசேகரனிடம் ராஜ்யத்தைத் தந்து கைலாஸம் சென்றான். சேகரன் பரதநாட்டியம் தவிர மற்ற கலைகளைக் கற்று நல்லாக்ஷி புரிந்தான். கரிகாலசோழ ராஜனது ஆஸ்தான பண்டிதர் ஒருவர் வந்து எங்கள் அரசனைப்போல் அறுபத்து நான்கு கலைகளையும் கற்கவில்லையே நீர் என்றார். ராஜசேகரன் இதைக்கேட்டு பரதநாட்டியத்தையும் கற்க ஆரம்பித்தான். நடனத்தால் தனக்குண்டான கால் வலியைப்போல் ஒற்றைக் காலிலேயே ஆடும் இறைவனுக்கும் எவ்வளவு துன்பம் உண்டாகும் என வருந்தினான். இறைவனது துன்பத்தை எப்படி நீக்குவது ? என சிந்தைகொண்டான்.

சிவராத்ரியன்று நியமத்துடன் பகவானை ஸேவித்து ப்ரபோ ! ஒரே காலால் ஆடும்போது அக்காலுக்கு நோவு உண்டாகாதோ ? அக்காலை மாற்றி மற்ற காலால் தாங்கள் நடனம்புரியவேண்டும். இல்லையேல் என் உயிரை விடுவேன் என்று கதறினான். பகவான் பிரத்யக்ஷமாகி அவன் கோரியபடி இடது காலைக் கீழே ஊன்றி வலது காலைத் தூக்கி நடனம் செய்தார். அன்று முதல் இன்று வரை இங்ஙனமே நடனம் நடைபெறுகிறது.

## குலோத்துங்கனுக்கு உண்மை உணர்த்தல்.

ராஜசேகரனது மகன் குலோத்துங்க பாண்டியன் அரசனானான். அச்சமயம் ஒரு ப்ராம்மணன், மனைவி குழந்தைகளுடன் தன்னூரைவிட்டு அயலூருக்குச் செல்கையில் ஓர் மரத்தின்கீழ் படுத்து இளைப்பாறினர். காற்றினால் மரத்திலிருந்து ஒரு அம்பு விழ அவர் மனைவி அந்த க்ஷணமே உயிர்விட்டாள். ப்ராம்மணன் அதைக் கண்டு கதறும்போது அருகில் ஒரு வேடன் வில்லும் கையுமாக நின்றான். அவனே மனைவியைக் கொன்றானென அவர் அரசனிடம் முறையிட்டார். குலோத்துங்கன் வேடன்

---

நண்பர் மனைவியை விரும்பினால் மனைவி இறப்பாள்.

குற்றவாளியா எனப் பலவகையாக விசாரித்தார். தான் கொல்லவில்லையென அவன் ஸத்யம் செய்தான். ப்ராம் மணி அம்பு பட்டே இறந்தாள். வேடன் கரத்தில் அம்பு இருந்தது. குற்றமில்லாதவனை சிக்ஷிப்பது பாபம். குற்ற வாளியை விடுவதும் பாபம். என்ன செய்வது? அரசன் அமைச்சருடன் வேடன் குற்றவாளியா அல்லவா என நீண்ட நேரம் சர்சை செய்தான். முடிவு காணவில்லை. மநித புத்திக்கெட்டாததை தெய்வமே கூறவேண்டுமென ஹாலாஸ்யநாதனை மனமுருக வேண்டினான். பகவான் அசரீரி வாக்கால் இன்றிரவு அந்தணனுடன் செட்டியார் தெருவில் நடக்கும் கல்யாண வீட்டிற்குச்செல், உண்மை விளங்குமென்றார். அங்கு ஆண்டவனருளால் யமதூதர் பேசும் சொல் இவர்கள் செவியில் வீழ்ந்தது. ஒரு நோயு மில்லாத மாப்பிள்ளையை எப்படிக் கொண்டு செல்வது என்றான் ஒருவன். ஒரு நோயுமில்லாத ப்ராம்மணப் பெண்ணை மரத்தில் தொத்தியிருந்த அம்பைக் காற்றினால் அசைத்து அவள் மார்பில் விழச்செய்து கொண்டுபோக வில்லையா? அப்படி, மேள சப்தத்தால் மிரண்ட மாட்டை அவிழ்த்துவிட்டு மாப்பிள்ளையைக் கொண்டு செல்வோம் என்றான் மற்றவன்.

அங்ஙனமே அது நடக்கக் கண்டபின் அரசனுக்கும் அந்தணருக்கும் ஸந்தேஹம் அகன்றது. செல்வமளித்து வேதியருக்கு மறுமணம்செய்வித்தான் வேந்தன். வேடனை விடுவித்து வேண்டிய பொருளைத் தந்தனுப்பினான். பழி தீர்த்த (அஞ்சிய)வன் எனப் பெயரிட்டு மதுரை நாதனைப் பூஜித்தான்.

*[அபவாதபயைகார்த்திதாய நம:]*

### மஹா பாபமகற்றினார்.

அவந்தி நகரத்தில் ப்ராம்மண குலத்திலுதித்த ஒரு வாலிபன் வேதியருக்குத் தகாத பல அநீதிகளைச் செய்து வந்தான். நாளடைவில் பெற்ற தாயையே மனைவியாக்கிக் கொண்டான். அவளும் அழகில் சிறந்தவள். காம வெறி

கொண்டு புதல்வனை ஆசை நாயகனுக்கிக் கொண்டாள். பாபம்! மஹா பாபம்!! இவர்களது செயலைக்கண்டு தந்தை சிந்தை நொந்து தவித்தார். இதை அறிந்த புத்ரன் அவரை உயிருடன் வைத்திருப்பது தீங்கென அவரைக் கொன்று பொருளுடனும் தாயுடனும் வெளியூர் சென்றான். மா பாபம் உடனே பலன்தர நடுவழியில் கள்வர் பொருளைக் கவர்ந்து அவளையும் இழுத்துச் சென்றனர். இவனுக்கு வயது முதிர்ந்தது. உடல் தளர்ந்தது. நோய் சூழ்ந்தது. மனம் நொந்தான். தந்தையைக் கொன்ற பாபம் தொடர்ந்தது. பசி தாஹம் நோய் மேலிட தன் செயலை நினைந்து வருந்தினான். கதறினான். எங்கு சென்றால் பாபம் தொலையுமென நாடெல்லாம் சுற்றினான். புண்ய தீர்த்தங்களெல்லாம் திரிந்தான். எப்படித் தீரும் மஹா பாபம்? தற்செயலாக அந்த மஹா பாபி மதுரை வந்தான். அச்சமயம் சிவன் வேடஸ்த்ரீ வேஷத்திலுள்ள மீனாக்ஷியுடன் வேடிக்கையாக வேடனாகிச் சொக்கட்டான் ஆடிக்கொண்டிருந்தார். அச்சமயம் அருகே வந்த அந்த அதமனைக் காட்டி காமனின் கட்டுக்கடங்காச் செயலைத் தேவியிடம் கூறினார். அருகிலணுகிய அவனை நீ யார்? எங்கு வந்தனை? என்றார். அவன் தனது பாபத்தையும் விருத்தாந்தத்தையும் கூறி அவர் தாளில் விழுந்து பாபமகல ஓர் வழி கூறுமென்றான். பித்ருஹத்தி, மாத்ரு கமனம் இரண்டும் கொடிய பாபம் அல்லவா? இது எப்படி அகலும்? எனது கருணையால் தான் நீங்கவேண்டும். இங்குள்ள புண்ய தீர்த்தத்தில் மூன்றுவேளை முழுகு. ஒரே வேளை பிச்சை எடுத்துப் புசி. நூற்றெட்டு முறை ஆலயத்தில் அங்கப்ரதக்ஷிணம் செய். அதிகாலையில் எழுந்து ஒருவருடனும் பேசாமல் அருகம் புல்லை எடுத்து பசுவுக்களி. சிவனடியாருக்குத் தொண்டு செய். உன் பாபமகலும் என்றார். மூன்றுமாதம் அங்ஙனம் செய்துவர அவன் உடலில் உள்ள ஹத்தி முதலிய தோஷம் அகன்றது. சுத்த ஶரீரம் உள்ளவனாகி, வேடனாக வந்து உதவியவர் ஶிவனே என எண்ணி அவரை ஆராதித்து நற்கதி பெற்றான்.

**கிராத வேஷாய நம:**

---

**ஸ்வஜாதி உத்தமர்மனைவியை கெடுத்தால் ஹ்ருதயநோய்**

# ஆயுர்வேதம். (6)

டாக்டர், V. K. வெங்கிடசாமி, M. B., B S., F. I. M.

**ஔஷத வர்க்கம்.** (மாசிமீ தொடர்ச்சி)

(2) திப்பிலிப்பொடி கால்பலம் கால்படி பசும்பாலில் போட்டுக்காய்ச்சி சாப்பிட்டுவர காஸம், மூர்ச்சை, வாயு, சந்நிபாதம் குணப்படும். (3) திப்பலி சூரணம் 1 விராகனிடை, கம்மாறு வெற்றிலைச் சார், தேன் ஒவ்வொன்றும் 1 டீ ஸ்பூன் இவைகளைக் கலந்து உட்கொள்ள கபம், கோழை, இருமல், ஜ்வரம் தீரும். (4) திப்பிலி பலம் 2, சீரகம், சுக்கு, ஏலம், திப்பிலி மூலம், வாய்விடங்கம், கடுக்காய், மிளகு, வகைக்குக் கால்பலம் இவைகளை இளம் வறுப்பாய் வறுந்து தேன், சர்க்கரை ஒவ்வொன்றும் 4 பலம் சேர்த்துக் காய்ச்சி பாகு பதத்திலிறக்கி பிசைந்து பாக்களவு தினம் இரு வேளை மண்டலம் (40 நாள்) சாப்பிட ஈளை, இருமல், க்ஷயம், பித்தவாயு, சோகை முதலியன நீங்கும். (5) வர்த்தமான பிப்பிலி முறை முதல்நாள் 5 பிப்பிலி தினமும் 5 அதிகமாகி 50 வரை (10 நாளில்) கொண்டுபோய் மறுபடியும் ஐந்தாய்க் குறைத்து கடைசி நாள் 5ல் நிறுத்தவேண்டும். பாலும் சர்க்கரையும் சிறிது சேர்த்து சாப்பிடலாம். இது பிலீகம், பெரிதான பழைய ஜ்வரங்களையும் போக்கக்கூடிய பிரயோகம்.

திரிகடுகம் (அல்லது திரியுஷணம்) என்பது சுக்கு, மிளகு, திப்பிலி சமனிடை கலந்த சூர்ணம், இதை ஒரு விராகனிடை காலை மாலை தேனில் உட்கொள்ள அக்னி மாந்தியம், தேகஸ்தூலம், சுவாஸ காஸம், சர்மரோகம், குல்மம், மேகம், யானைக்கால், பீநஸம் (நாட்பட்ட மூக்குச் சளி) இவை போம். கபஹர குணமுடையது.

கீழ்க்கண்ட கஷாயங்கள் குறிப்பிட்ட தோஷ ஜ்வரங்களுக்கு ஏற்றவை. சரக்குகளின் பாகங்கள் குறிக்காவிடில் சம எடை எடுத்துக்கொள்ள வேண்டும். சரக்குகளின் மொத்த எடைக்கு எட்டு தரம் தண்ணீர் சேர்த்து எட்டில் ஒன்ருகவோ அல்லது நாலில்ஒன்ருகவோ காய்ச்சிக் கொள்ளலாம். பொதுவாக கஷாயங்கள் தயாரிக்கும்

முறை இதுவே. சில சமயம் காய்ச்சாமலே கஷாயம் செய்யவேண்டி வரும். இதற்கு சீத கஷாயம் எனப் பெயர். அத்தகையனவற்றை அங்கங்கே குறிப்பிடப் படும். ஒன்றுமுதல் இரண்டு அவுன்ஸ் தினம் இருவேளை அருந்தலாம். எல்லா மருந்துகளையுமே குழந்தைகளுக்கு வயதுக்கு ஏற்றபடி அளவைக் குறைத்துக் கொடுக்க வேண் டும். பொதுவான விதி ஒன்று உண்டு. வயதை, பன்னிரண்டை வயதுடன் கூட்டிய எண்ணால் வகுத்துவரும் பின்னத்தை எடுத்துக்கொண்டு, பெரியவர்களுக்கு கொடுக்கும் அளவை, அதனால் பெருக்கினால், வயதுக்கு ஏற்ற அளவு கிடைக்கும். உதாரணம்: 3 வயது — பின்னம்: $3/3+12=\frac{1}{5}$ பாகம். (பெரியவர்கள் அளவில் ஐந்தில் ஒரு பாகம்). 1 **வாத ஜ்வரம்** - ஆடாதொடை (இலை). சீந்தற்கொடி, கோரைக்கிழங்கு, பேய்ப்புடல், சுக்கு. 2 **வாத ஜ்வரம்** - சுக்கு 8, சீந்தற்கொடி 2, கடுக்காய்த்தோல் 2, தயாரித்து சர்க்கரை 1 சேர்த்து சாப்பிடவும். 3 **பித்த ஜ்வரம்** - வேப்பம்பட்டை, ஆடாதொடை, கடுகுரோகிணி, நிலவேம்பு, சீந்தற்கொடி. 4 **கப ஜ்வரம்** - கடுக்காய், கட்பலம், சுக்கு, கோரைக்கிழங்கு, வசம்பு, நிலவேம்பு, மல்லிவிதை, தேவதாரு, சிறுதேக்கு, பர்ப்பாடகம், தயாரித்து தேனையும், பெருங்காயத்தையும் சேர்த்துச் சாப்பிடவும். 5 **வாத கப ஜ்வரம்** - தசமூலம் (சிறு மல்லிகை, பெருமல்லிகை, கண்டங்கத்திரி, சிறுவழுதுணை, நெரிஞ்சி, பில்வம், தழுதாழை, பெருங்குமிழன், பாதிரி, பெருவாகை), சுக்கு, மிளகு, திப்பிலி, ஆடாதொடை. 6 **பித்த கப ஜ்வரம்** - சீந்தற்கொடி, வேம்பு, கடுகு ரோகிணி, கோரைக்கிழங்கு, வெட்பாலரிசி, சுக்கு, பேய்ப்புடல், வெண் சந்தனம், திப்பிலி. 7 **எல்லா தோஷ ஜ்வரங்கள்** - சீந்தற்கொடி, கொத்தமல்லி விதை, வேம்பு, செஞ்சந்தனம், பத்மகம் (ஓரிலைத் தாமரை) 8 **நாட்பட்ட தோஷ ஜ்வரங்கள்** - சீந்தற்கொடி, திப்பிலி. 9 **விஷம ஜ்வரம்** - பேய்ப்புடல், வெட்பாலரிசி, தேவதாருப்பட்டை, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், கோரைக்கிழங்கு, திராக்ஷை, அதிமதுரம், சீந்தற்கொடி, ஆடாதொடை தயாரித்து தேன் கலந்து உட்கொள்ளவும்.

---

விநாயகரும் இதை உணர்ந்து விழித்தெழுந்து ஊராருடன் ஓடி வ்யாக்ரமுகனது வாயில் நுழைந்தார். இதே தக்க ஸமயமென அவன் வாயை மூடினன். அக்நி ஜ்வாலேயைவிட அதிக தாபமடைந்த அனைவரும் விநாயகரை நினைத்துத்துதித்தனர். அவர் அவ்வரக்கனது வாயை பிளந்து மேல் புறத்தை ஆகாயத்தில் எரிந்தார். வெளியில் வந்து கையை நீட்டி அக்நி ஜ்வாலேயை விழுங்கினர். அக்நி சென்றவிடம் தெரியாமல் மறைந்தது. தாபம் நீங்கி இன்புற்றனர். ஜ்வாலேயிலும் அரக்கன் வாயிலும் இறந்த அனைவரையும் எழுப்பினர். எல்லோருமவர் திருவடியை வணங்கி ஸ்தோத்ரம் செய்து வீடு திரும்பினர்.

***அரசன் ப்ருசுண்டியை அழைத்தல்:*** வழக்கப்படி காசி ராஜன் விநாயகரைப் போஜநத்திற்கு அழைத்தான் ஒருநாள். அவர் வயிறு நிறைந்து இருந்தார். உண்ட மிகுதியான திவ்யான்னங்களேயும் பக்ஷ்யங்களேயும் கனிவர்க்கங்களேயும் கண்டான். ஆஶ்சர்யம் கொண்டு ஸ்வாமின்! யார் தங்களுக்கு மிக அற்புதமான அறுசுவை விருந்தளித்தது? என்று வினவினன். மஹாராஜ! தண்டகாரண்யத்தில் **நாமல** என்ற ஆஶ்ரமத்தில் ப்ருஶுண்டி என்றோர் முநிவர் இருக்கிறார். அவர் சுக்ல சதுர்த்தியான இன்றைக்கு விஶேஷ பூஜை செய்தார். பக்தியுடன் அவர் அளித்தவை இவை. அவர் ஸதா என்னை த்யாநம் செய்கிறார். அவர் தவம் செய்யும் பொழுது அவரது புருவங்களில் இடையிலிருந்து துதிக்கை தோன்றிற்று. மானிலத்தில் மற்றவர்களுக்குக் கிடைக்காத ஸாரூப்ய முக்தியை அவருக்கு அளித்தோம் என்ருர் விநாயகர். அப்படியாஞல் அந்த உத்தமரை தர்சிக்க வேண்டுமே என்ருன் வேந்தன். இப்பொழுதே சென்று நானிங்கு இருப்பதாகக் கூறி உனது புத்ரன் விவாஹத்திற்கு அழைத்துவா என்ருர் கணபதி. அரசன் அங்ஙனமே காடுமலேகளேக் கடந்து முநிவரது ஆஶ்ரமம் அடைந்தான். அழகிய சாந்தமான ஆஶ்ரமத்தைக் கண்டு ஆநந்தம் அடைந்தான். மஹர்ஷி ப்ரஶுண்டியின் திருவடியை வணங்கினன். அவரும் அதிதிக்குத் தக்கபடி பூஜை செய்து நீ யார்? எங்கு வந்தாய் என வினவினர்.

வேந்தன் வந்த விஷயத்தை விவரித்து விநாயகர் சொற்படி தன் நாட்டிற்கு வரவேண்டும் என வேண்டினன்.

ராஜன்! இது உண்மையா? தேவருக்கும் மூவருக்கும் கிட்டாத கணபதி உன் ஊருக்கு வந்தாரா? பல்லாண்டு தவம் புரியும் தபஸ்விகளுக்கும் அகக்கண்ணுக்கு எட்டாத விநாயகர் உனது முக்கண்ணுக்குத் தெரிகின்றாரா? அப்படியானால் அவர் ஸ்வரூபத்தைக் கூறு என்றார் முநிவர். மஹர்ஷே! ஆயிரம் நாவுபடைத்த ஆதிசேஷனுக்கும் கூற முடியாத அவர் ஸ்வரூபத்தை அடியேன் எப்படிக் கூற முடியும்? அவர் தேவதேவர். எல்லாமானவர். கச்யபரது தவத்திற்கிணங்கி அவனியில் அவர் புத்ரராக அவதரித்தவர். அத்புதமான காந்தியுள்ளவர். நான்கு கரங்கள் பெற்றவர். திவ்யாயுதங்கள் ஏந்தியவர். அவரே தங்களை அழைத்தார் என்றான் அரசன். ராஜன்! அவர் நான் த்யானம் செய்யும் மூர்த்தியல்ல என்றார். எனது உபாஸன மூர்த்தி அழைத்தால் எங்கும் செல்வேன். நானங்கு வரவில்லை நீர் போகலாம் என்றார் முநிவர். இதைக்கேட்டு அரசன் மநம் முறிந்தது. வதநம் வாடியது. தலைகுனிந்து பெருமூச்சு விட்டான்.

எனக்கு ப்ாக்யமில்லை. விநாயகர் கூறியும் தாங்கள் வர சம்மதிக்கவில்லை. தங்களை அழைத்துச் செல்லும் ஆசையால் நதி மலை காடுகளைத் தாண்டி வரும்போது கஷ்டம் தெரியவில்லை. இவ்வளவு கஷ்டங்களைத் தாண்டி எப்படிச் செல்வேன் என்றான் அரசன். வேந்தே கண்ணை மூடு திற என்றார் ப்ருசுண்டி. அங்ஙனம் கண்மூடி திறந்தவுடன் அரசன் தனது அரண்மனையில் தானிருப்பதைக் கண்டு வியந்தான். விநாயகரிடம் நடந்ததைக் கூறி வருந்தினான். ராஜன்! உமது கஷ்டத்தை நன்கறிவேன். கவலையைவிடு. மறுபடியும் அவரிடம் சென்று கஜாநநன் உம்மை அழைத்தார் எனக்கூப்பிடு. விரைவில் வருவார் என்று கூறி விநாயகர் அறை க்ஷணத்தில் அரசனை ப்ருசுண்டி ஆச்ரமத்திற்கு அனுப்பினார். வேந்தனும் கஜாநநன் தங்களை அழைக்கிறார் என்றார். அந்த சப்தத்தை கேட்டவுடன் ஆநந்தப் பரவசமாகி இதோ வந்துவிட்டேன் எனப் புறப்பட்டார். என்றும் எங்கும் செல்லாத அவர் திருவடிப்பட்டவுடன் பூமி அசைந்தது. பூதேவி எதிரில் வந்து ப்ரபோ! தங்களைச் சுமக்க என்னாலாகவில்லை. என்னைக் காப்பாற்றுமென திருவடியில் வந்து விழுந்தாள். ப்ருசுண்டி மூன்றாவது அடியில் காசிமாநகரம் வந்தார்.

ராஜோபசாரத்துடன் அரசருடன் முநிவரை எல்லோ ரும் வரவேற்றனர். அரண்மனைச்சென்று எங்கே கஜாநநர் என்றார் முநிவர். அதோகுழந்தைகளுடன் விளையாடிக் கொண்டிருக்கிறார் என்றவுடன் அங்கு ஓடினார் முநிவர். கோடிஸூர்ய ஸமமாய் துதிக்கையுடன் இருகரங்களுடன் காக்ஷியளித்தார் பகவான். இதைக்கண்டு முநிவர் அரசே என்னை ஏய்த்துவிட்டாய். இவரல்ல கஜாநநன். உன்னைச் சபிப்பேன் என முநிவர் கூறினார். அவரைப் பார்த்து நீர்தர்ஶித்த விநாயகர் எப்படி இருந்தார் என்று பகவான் கேட்க பத்துகரம் திவ்யாம்பரம் முத்துமாலை ஸித்தி புத்தி, காதில் குண்டலம், ஸிந்தூர நிறம் இத்தகைய ரூப முள்ளவர் நான் கண்ட கஜாநநர் என்றார் முநிவர். விநா யகர் அத்தகைய ரூபத்தை எடுத்து நிற்க ப்ருஶூண்டி ஆநந்தப் பரவசமானார். அடியற்ற மரம்போல் வீழ்ந்து பணிந்தார். எழுந்து துதித்தார். ஷோடச உபசார பூஜை செய்தார். கஜாநநர் பத்துகரங்களாலும் அவரை தழுவிக் கொண்டாடினார். பகவானையும் பக்தனையும் பார்த்து பர வசமானான் பார்த்திபன். பூபாரத்தை அகற்றவும் அசுரர் களை கொல்லவும் அதிதியின் இஷ்டத்தைப் பூர்த்திசெய்ய வும் இங்ஙனம் அவதரித்தேன். அவரவர் த்யாநம் செய்த படி உருவமெடுப்பேன், என்று கூறி சிறுவருடன் விளை யாடச் சென்றார் விநாயகர்.

**ஜோஸ்யராக வந்த அரக்க வதம்:** ஒருநாள் ஜோஸ் யரைப்போல் வேஷம் தரித்து அரக்கன் ஒருவன் அரசனது அரண்மனைக்கு வந்தான். வித்வான்களை அர்ச்சிப்பது வேந் தர் வழக்கமல்லவா? இது வரை காசி ராஜ்யத்தில் நேர்ந்த அரிஷ்டங்களை எல்லாம் கூறி இவ்வளவுக்கும் காரணம் கஶ்யப புத்ரனே. ஆதலால் ஜநஸஞ்சார மில்லாத வநத் தில் அவனைக் கொண்டுவிடு. இல்லையேல் கடல் பொங்கி விரைவில் உனது ராஜ்யத்தை விழுங்கும். மலைகள் புரண்டு நகரம் நாஶமாகும். அதி சூரர்களான அந்நிய அரசர்கள் உன்னைப் போரில் முறியடிப்பர். இத்தகைய துன்பம் நேரிடாதபடி மதோத்கடனை அப்புறப்படுத்து என்றான். ஐயா! நீர் சொல்வது சரி! உலகை காக்கவும் அழிக்கவும் படைக்கவும் ஶக்திவாய்ந்த இவனை யார் எப்படி அப்புறப்படுத்தமுடியும்? உமக்கு ஶக்தியிருந்தால் நீர் அழைத்துச் செல்லும் என்றார் பார்த்திபன்.

அவனை அழைத்துவா. அவனது கரத்தில் காட்டுகி றேன் வரப்போகும் தீமைகளையென்றார் ஜோஸ்யர். அநேக குழந்தைகளுடன் ஓடிவந்து விநாயகர் தனது கரத்தைக் காண்பித்தார். சில ரேகைகளைச் சுட்டிக்காட்டி குழந்தாய் நீ நான்கு நாட்களுக்குள் கிணற்றில் விழ்வாய். அதிலிருந்து தப்பினால் கடலில் முழுகுவாய். அதிலும் தப்பினால் இருள் சூழ்ந்த குஹையில் அகப்பட்டுக் கொள்வாய். அதிலும் தப்பினால் உன் தலைமீது ஒரு மலை விழும். அதனின் றும் தப்பினால் இரு கால புருஷர்கள் உன்னைப் பக்ஷிப்பர். இவைகளிலிருந்து தப்பிப்பிழைக்கவிரும்பினால் என்னுடன் நான்கு தினங்கள்வா. ஆபத்துகள் வராதபடி காப்பாற்றி மறுபடியும் அரசனிடம் கொண்டு விடுகிறேன் என்றான் அரக்கன். அவனது திருட்டெண்ணத்தை அறிந்த பக வான் அஃதிருக்கட்டும், அரசனது ரத்ன மோதிரம் காணா மல் போய்விட்டது. அதை யார் எடுத்தது? மறுபடியும் கிடைக்குமா? என்று முதலில் கூறி நம்பிக்கை வரும்படிச் செய். பிறகு நீ சொன்னபடி கேட்போம் என்று விநாய கர் தானே அதை எடுத்து ஒளித்தார்.

குழந்தாய்! அதைஎனக்கே தருவதானால் கூறுகிறேன் என்றான் ஜோஸ்யன். ஆகட்டுமென பகவான் கூற நீதான் அதை எடுத்து பதுக்கி வைத்திருக்கிறாய்? என்றான் அரக் கன். பகவான் புன்னகை புரிந்து அந்த மோதிரத்தினால் அவனைக் கொன்றார். அரக்கனது பயங்கர உருவைக் கண்டு எல்லோரும் வியந்தனர்.

நராந்தகன் மறுபடியும் கூபகன், கந்தரன் என்ற இரு ராக்ஷஸர்களை விநாயகரைக் கொல்லும்படி அனுப்பினான். இருவரும் எப்படிக் கொல்லலாமெனயோசித்து கூபகன் தான் ஒரு அழகிய கிணற்றில் தவளையாக இருப்பதாக வும் கந்தரனை பாலனாக்கி விநாயகனையும் மற்றவர்களை யும் விளையாடச் செய்து விநாயகனைக் கொல்வதாகவும் தீர்மானித்தனர். அங்ஙனமே அழகிய விசாலமான கிணற்றில்விளையாடச் சிறுவர்களுடன் விநாயகரும் கிளம் பினார். கிணற்றில் முழுகுவதும் நீய்வதும் ஒருவர்மீது ஒருவர் ஜலத்தை வாரி இறைப்பதுமாக விளையாடினார்.

கந்தரன் மெதுவாக விநாயகரையும் அழைத்துச் சென்றான். விநாயகர் மாயையினால் பலவகையாக லீலை

செய்தார். வெகு நேரம் ஜலத்தில் மூழ்கி கந்தரனுடன் ஆழத்தில் சென்று வெளியில் வராததால் விநாயகர் இறந்தாரென பலரும் கதறினர். அரசன் உள்ளே முழுகி விநாயகரை கொண்டுவருபவருக்கு வேண்டிய பொருளைத் தருவதாக வாக்கு அளித்தார். ஆனால் ஒருவராலும் அது முடியவில்லை. அவர் தந்தைக்கு என் சொல்வோம்? என்று சிந்தை கலங்கி நின்றார் வேந்தன். அச்சமயம் விநாயகர் தன்ரூபத்தை கந்தரனுக்களித்து தான் மறைந்து இருக்க, தவளையாயுள்ள கூபன் கந்தரனைக்கொல்ல முயற்சித்தான். கந்தரனுக்கு தவளையாயுள்ளவன் விநாயகராகத் தோற்ற விநாயகரைக் கொல்வதாகக் கருதி ஒருவரை யொருவர் அடித்துக்கொன்றார்கள். வெளியில் வந்த விநாயகரைக் கண்டு ஆச்சர்யமடைந்து அவர் மூல மாக நடந்ததை அறிந்து காசி ராஜன் முதலிய அனைவரும் விநாயகரை ஆலிங்கனம் செய்து கொண்டு ஆநந்த மடைந்தார்கள்.

## அந்தகன் துங்கன் அம்பாஸுரன் வதம்.

நராந்தகனது, தூண்டுதலால் இம்மூவர்களும் அவர் களைப்போலவே மாயையினால் ஒருவன் இருளாகி நகர வாசிகளுடன் விநாயகரையும் கண்தெரியாமல் செய்வதாக வும், மற்றொருவன் கடலாகி அவர்களை மூழ்க அடிப்பதா யும், மற்றொருவன் மலையாகி ஆங்குள்ளோர்களை மோதி கொல்வதாகவும் ஸங்கல்பம் செய்துகொண்டு காசி நகரத்தை சூழ்ந்துகொண்டார்கள். நகர வாசிகள் அனை வரும் தவித்தனர்.

விநாயகர் மாயையினால் ஆங்குஓர் விசாலமான ஆல மரமாகி அதில் உலகெலாம் பரவி மரக்கைகளுள்ள ஓர் பறவையாகி மூக்கினால் நீரையெல்லாம் அருந்தினார். அங் ஙனம் 11 நாள் ஆயின. விநாயகர் பால ரூபத்தோடு தங்களுடன் காணப்படுவதால் பக்ஷியாக உள்ளது கணே ஶர் என்று அறியவில்லை.

கடலாக உள்ளவன் கல்மழையாக மாறி கொட்டிய பொழுது தனது இரக்கைகளால் நகரத்தில் மழை விடாத படி காத்தார் அவர். மலையாக உள்ளவன் இறக்கைகளு டன் மேலே பறந்து பக்ஷிரூபமாகவுள்ள விநாயகரை கொல்ல முயற்சித்தான். இருவரும் சிறிது நேரம் யுத்தம்

செய்து அந்தகனேயும் அம்பாஸுரனேயும் இருகால்களுள் தூக்கிக்கொண்டு ஸகல லோகங்களையும் சுற்றி பூமியில் விழுந்து மூவரும் இறந்தார்கள். தேவ ரூபமான ஆலமரமும் பக்ஷியும் மறைந்தவுடன் முன் போல் காற்று மழை ஜலம் இவைகள் இல்லாமலும் காசி நகரம் ப்ரகாசமாக விளங்கிற்று. இதுவும் விநாயகரது லீலை என உணர்ந்து அவரைப் போற்றினர்.

### ப்ரமர ராக்ஷஸீ வதம்.

விநாயகரால் கொல்லப்பட்ட அம்பாஸுரனது தலை அவனது தாயான ப்ரமரீ என்பவளிடம் போய் விழுந்தது. இந்த்ராதி தேவர்களையும் ஆதிசேஷனையும் ஆட்டிவைத்த என் புதல்வனது தலையை அறுத்தவன் யார்? என துக்கத்தினல் மார்பிலும் தலையிலும் அடித்துக்கொண்டு மூர்ச்சையாகி விழுந்தாள் ப்ரமரீ.

தோழிகள் அவளை ஸமாதானப் படுத்தி அத்தலையை விதிப்படி எரிக்கும்படி கூற இத்தலையை அறுத்த விநாயகனது தலையையும் கொண்டுவந்து இரண்டையும் ஒன்ருகக் கொளுத்துவேன். அதுவரை இத்தலையை எண்ணெய் கொப்பரையில்வைத்து வையுங்களெனக்கூறி காசிநகரம் சேர்ந்தாள். ஆங்கு அழகான அதிதியின் உருவம்தாங்கி ''ராஜன்'' என் அருமை புதல்வனை அழைத்துவந்து வெகு நாளாகிவிட்டதே. அவனைக் காணுது ஒரு க்ஷணமும் ஒரு யுகம்போல் தோன்றுகிறது. அவனுக்கோ ஸகல துன்பங்களும் நேருகிறது. அவனைக்காண ஓடோடிவந்தேன் என்று அதிதி வேஷம் தரித்துக்கேட்டாள். காசி ராஜனும் தாயே நீங்கள் கூறுவது உண்மை. எண்ணிறந்த அரிஷ்டங்கள் தோன்றினுலும் அவரது மஹிமையால் யாதொரு ஆபத்தும் இல்லை. சுகமாக இருக்கின்ருர் என்று கூறிக் கொண்டிருக்கும் பொழுதே விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்களுடன் விநாயகர் உள்ளே வந்தார். பெற்ற தாய் போல் அன்போடு அவரைத் தழுவி குழந்தாய்! கண்ணே என பலவாறு கொஞ்சினள். இவள் மாயையையறிந்த விநாயகர் அவர் மடிமீதே அமர்ந்து எனக்கு என்ன பக்ஷணம் கொண்டு வந்தாய்! எனக் கேழ்க்க விஷம் கலந்த லட்டை அவள் அளிக்க அதைப் பக்ஷித்து இன்னும் ஒன்று கொடு என்று விநாயகர் கேட்டார். காசிராஜன் விளையாடி

வந்த குழந்தைக்கு வயிருர நீயே உணவு அளி. பசி போலிருக்கிறது என அவளை அழைத்தான். விநாயகர் மலைபோல் கனத்து அவள் மடியை அழுத்த அவள் எழுந்திருக்க முடியாமல் என்னை விடு. நான் உன் தாயல்லவா. வெகு நாள் கழித்து உன்னைக் காணவந்தேன் எனக்கூறும் பொழுது அவள் மடியில் படுத்துறங்கினர். கால்கைகளை அவள் மீது நீட்டி அவள் வலிபொருக்காமல் கதறும்படிச் செய்தார். உடனே அவள் உயிரற்று ராக்ஷஸப் பிணமாக விழ்ந்தாள். இதைக்கண்டு ஆச்சர்யமடைந்த அரசன் இவள் அதிதி யல்ல! ராக்ஷஸியே! என விநாயகரைத் துதித்து அவள் சரீரத்தை அப்புறப்படுத்தினன்.

**ஶுக்லருக்கு அருள் புரிதல்:** காசி நகரவாசிகள் அரசனிடம் வந்து ஒப்பற்ற ஶக்தி வாய்ந்த மதோத்கடரை அழைத்துப் பூஜித்து எங்கள் இஷ்டத்தைப் பூர்த்திசெய்து கொள்கிருேம். அவரை எங்களுடன் அனுப்புங்கள் என வேண்டினர். அவர்களது பக்தியைக்கண்டு அரசன் அதற்கு இணங்கி விநாயகரை அவர்களது முன்னிலையிலேயே பிரார்த்தித்தார். உங்கள் வீட்டில் ஏதேனும் கல்யாணம் முதலியன நடந்தால் வருகிறேன் என்ருர் அவர். ராஜ புத்ரனது கல்யாணமானவுடன் தங்களை பெற்ருேர் அழைத்துச் செல்வர் ஆதலால் இப்பொழுதே அருள் புரிக என்றனர். விநாயகரை ஏற்க ஒவ்வொரு வீட்டிலும் விசேஷ அலங்காரம் செய்து விருந்தளிக்க தக்க ஏற்பாடு செய்தனர்.

ஶுக்லர் வித்ருமா என்ற ஏழை தம்பதியும் அவரை அழைக்க அவா கொண்டனர். ஆனல் அவருக்கேற்றபடி உபசரிக்கப் பொருளில்லை. ஆயினும் பக்தியினல்தான் அவர் ஸந்தோஷமடைவார் என அவர்களும் அழைத்தனர். அன்று அவருக்கு விருந்தளிக்க ஒன்றும் கிடைக்கவில்லை. தவிட்டிலிருந்த நொய்யைச் சிறிது அன்னமாகவும் சிறிது நொய் கஞ்சியாகவும் செய்து வைத்து விநாயகரை தூர்வையாலும் வந்நி பத்திரத்தாலும் பூஜித்தனர். நொய்யன்னத்தையளிக்க வெட்கப்பட்டு காட்டில் கிடைத்த கந்த மூலங்களையும் கனியையும் அளித்தனர். விநாயகர் உள்ளேயுள்ள அந்நத்தையும் கஞ்சியையும் அளியென வற்புறுத்தினர்.

அங்ஙனமே அவள் பரிமார இலையில் விட்ட கஞ்சி ஓடியதால் பக்தன் ஆதரவுடன் அளித்த அமிருதத்தினும் இனிய அதைச் சிந்த விடாமல் பத்து கரங்களை எடுத்துக் கொண்டு வயிரார புஜித்தார். அவருடன் வந்த சிறுவர்கள் ஆஶ்சர்யமடைந்தனர்.

ஸநகர் ஸநந்தனர் என்ற இருவரும் இவர் பெருமையைக் கேட்டு தர்ஶிக்க வந்தபோது சிறு குழந்தைபோல ஆசாரமின்றி எல்லா ஜாதி குழந்தைகளுடனும் விளையாடிக் கொண்டிருந்தார் விநாயகர். மடி விழுப்பு எச்சில் தீட்டு இல்லாமலிருக்கிறாரே. இவரோ பரமன்? இவரோ கர்ய பருக்கேற்ற புதல்வன்? என்று யோசித்தனர். ஆனால் ஒரேஸமயத்தில் பலரூபங்களை எடுத்ததையும் ஶுக்லனது ஏழ்மையை யகற்றி உடனே குபேரனைச் செய்ததையும் கண்டு இவர் பரமாத்மா என கொண்டாடி காசியில் தங்கள் பெயரால் ஒருகணபதியை ப்ரதிஷ்டை செய்து சென்றனர்.

விநாயகர் காசிநகரில் உள்ள அனைவர் வீட்டிற்கும் வருவதாகக் கூறி அவர்கள் தக்க ஏற்பாடுகள் செய்திருந்த பொழுது சக்ரரது வீட்டிற்கு மாத்திரம் சென்று வயிரார புஜித்து படுத்திருந்ததைக் கேட்டுசிலர் வருந்தினர். நமக்கு பாக்யம் கிடைக்கவில்லையே என சிலர் ஏங்கினர். தங்களை உபவாஸமாகயிருக்கும்படிச் செய்து தங்கள் வீட்டிற்கு வராமலே சென்றனரே என்று சிலர் சினங்கொண்டனர். எல்லோரையும் திருப்தி செய்விக்க ஒரே ஸமயம் பல உருவமெடுத்து அந்தந்த வீட்டிலும் உண்டு களித்து ஆனந்தத்தை உண்டு பண்ணினார். நகரவாசிகள் செல்வத்தினால் சிறிது செறுக்கு கொண்டிருக்க பக்தியே முக்யமென்று காட்ட முதலில் ஏழையான சுக்லன் வீடு சென்றார்.

## பீமனும் ராக்ஷஸனும் ஶமீபத்ரத்தால் நற்கதி பெற்றது

விதர்ப்ப தேஶத்தில் மஹிஷா எனும் நகரத்தில் பீமன் என்ற வேடனொருவன் இருந்தான். அவன் ஜாதிக்கேற்றபடி ப்ராணிகளை வதம் செய்து மாம்ஸத்தைக் கொண்டு ஜீவித்து வந்தான். ஒரு நாள் காலையிலே எழுந்திருந்து எண்ணிறந்தப்ராணிகளைக் கொன்று குவித்தான். அச்சமயம் பிங்காக்ஷனென்ற ராக்ஷஸன் ஓடிவந்து இவனை

பக்ஷிக்க ஆரம்பித்தான். வேடன் பயந்து ஓடி அருகில் உள்ள ஶமீ மரத்தின் மீது ஏறி ஒளிந்தான். இராக்ஷஸனும் அவன் பின்னே சென்று மரத்தில் ஏறினன். அப்பொழுது கிளேயசைந்து வாமனரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட விநாயகர் மீது அவ்விலேகள் விழ இருவரும் ஶமீ பத்ரத்தால் தன்னே பூஜித்தனர் என்று அவர்களே விமானத்திலே ஏற்றி கணேஶலோகத்திற்கு அழைத்துச்சென்ருர்.

அவ்வேடன் முற்பிறவியில் ஓர் துஷ்ட அரசன். எல்லாமறிந்தவீரனை ஒரு அரசனிருந்தான். மதனுவதி என்ற மனேவியுடன் பல வேள்விகளேச் செய்தான். அவன் ஸந்ததி இல்லாமல் இறந்த பொழுது அவனது ஜாதி வம்சத்தில் பிறந்த துர்தர்ஷனன் என்பவனது மனேவியிடம் வேருெருவனுல் உண்டு பண்ணப்பட்ட ஸாம்பன் என்பவனே அரசனுக்கினுர்கள். அவன் துஷ்ட புத்தியும் துராசாரமும் உள்ளவன். பிறர் பொருளேயும் பத்னியையும் கவர்ந்து அனுபவித்தான். தன் கார்யத்திற்கு தடைசெய்வோரை வெட்டி வீழ்த்துவான். தன் ஸகோதரியையும் அனுபவிக்க அஞ்சவில்லே. தன்னே அரசனுக்கிய மந்திரிகளிருவம் இத்தீயச் செயலே விடும்படி நயமாகக் கூறினர். அவ்விருவர்களேயும் சிறையிலடைத்து தன்னேப்போன்ற துஷ்டபுத்தி என்ற ஒருவனே மந்திரியாகச் செய்து தீய கார்யங்களேச் செய்து வந்தான். இருவரும் வனத்தில் வேட்டையாடும் பொழுது ஓர் ஜீர்ண விநாயகர் ஆலயத்தைக் கண்டனர். அது தசரத சக்ரவர்த்தியால் நிர்மாணம் செய்யப்பட்ட ஆலயம். அவரால் இராம லக்ஷமணர் முதலியவர்கள் பிறந்தார்கள். அவ்வாலயத்தை வலம் வந்து வணங்கிச் சென்ற இவர்களே இறக்க அவ்விருவர்களேயும் பலவகையான நரகத்தில் தள்ளி பல்லாயிரமாண்டுகளுக்குப்பின், பாபசேஷத்திஞல் காக்கை, கோட்டான், பாம்பு, தேள், ஓணன், நாய், நரி முதலிய பற்பல பிறவிகளே அளித்து முடிவில் முற்கூறிய வேடனுகவும் இராக்ஷஸனுகவும் பிறப்பிக்க அதிலும் பல பாபங்களேச் செய்தனர். பலபிறவிகளுக்கு முன் விநாயகரை தர்ஶித்த புண்யத்தால் மரத்தில் ஏறி அடியில் உள்ள வாமனர் பிரதிஷ்டை செய்த விநாயகர் மீது வஹ்னி இலே விழும்படியும் அதனுல் நற்கதியும் ஏற்பட்டது.

## வாமன விநாயகர்.

பிரஹ்மா கூறியபடி கஶ்யபர் உலகைப் படைக்க தன் பத்னிகளுடன் தவம் செய்தார். ஒருநாள் ஸந்த்யாகாலத்தில் திதி எனும் மனைவி அவரை பலாத்காரம் செய்து மிக க்ரூரர்களான ஹிரண்யாக்ஷ ஹிரண்ய கஶிபு என்பவர்களைப்பெற்றாள். ஹிரண்யகஶிபு சுக்ரர் கூறியபடி சிவனை நாடித்தவம் செய்து எவராலும் எந்த ஆயுதத்தாலும் பகலிலும் இரவிலும் மரணமில்லை யென வரம் பெற்றான். ஶக்ரனது பதவியை அபகரித்து அனைவரையும் ஹிம்ஸித்தான். தனது புத்ரனான ப்ரஹ்லாதனை ஹிம்ஸிக்கும் பொழுது தூணிலிருந்து வந்த நரஸிம்ஹமூர்த்தி அவனைக் கொன்றார். வராஹமூர்த்தி அவன் ஸகோதரனைக் கொன்றார். அவனது புத்ரனான விரோசனன் சூர்யனை உபாஸித்து அபரிமிதமான ஶக்தி வாய்ந்த ஓர் கிரீடத்தைப் பெற்றான். அது தலையிலுள்ள வரை இவனுக்கு மரணமில்லை, பிறர் கைபட்டால் அது தூள் தூளாக வெடித்து விடும் என்று சூரியன் கூறினன். அவன் மூன்றுலோகத்தையும் ஆக்ரமித்து தேவர்களையும் ப்ராஹ்மணர்களையும் ஹிம்ஸித்து வந்தான். அவர்களது வேண்டுகோளுக்கு இணங்கி திருமால் மாயையினால் ஒரு பெண்ணைப்படைத்து அவனிடம் சென்று மயக்கும்படிக் கூறினர்.

ஒரு நாள் அந்தஸ்த்ரீ விரோசநனுக்கு தன்கையினால் எண்ணெய் தேய்ப்பதாகக் கூறி அந்த கிரீடத்தை அவள் எடுக்கும் பொழுது அது தூள் தூளாக வெடித்தது. அவனும் சத்ருவால் எளிதில் கொல்லப்பட்டான். அவனது புத்ரனான பலி சுக்ரரிடம் பல நீதிகளைக் கேட்டான். நூறு அஶ்வமேதம் செய்வதால் இந்திரபதவி கிடைக்கும். என உணர்ந்து தொண்ணூற்றென்பது அஶ்வமேதம் செய்தான். நூறாவது முறை செய்தபொழுது தேவேந்திரன் சிந்தை கொண்டு மகாவிஷ்ணுவை ஶரணமடைந்தான். பகவான் பக்தனான மகாபலியை வேறுவகையில் சிக்ஷிக்க வகையில்லையென்று வாமனராகி வந்து ஸ்வர்க்கத்தை யாசித்து உனக்குத் தருகிறேன் என்று வாமனராக அவதரித்தார்.

தந்தையிடம் சென்று தேவர்களுக்கு நன்மை செய்ய என்ன உபாயமென்று கேழ்க்க அவர் விநாயகரது ஷடக்ஷரீ மஹாமந்த்ரத்தை உபதேசித்து அவரருளால்தான்

இதைச் சாதிக்கலாமென்ருர். வாமனர் விதர்ப்பதேசத்தில் ஓர் அழகிய ஆச்ரமம் அமைத்து அதில் ஷடக்ஷரீ மந்திரத்தால் விநாயகரை பல்லாண்டு ஆராதித்தார். விநாயகர் மயில் வாஹநத்தில் ஏறி வந்து ஸித்தி புத்திகளுடன் தர்ஶனமளிக்க, மஹாவிஷ்ணு அவரைவணங்கி பூஜித்தார். விரைவில் உன்னிஷ்டம் பூர்த்தியாகும் எனக் கூறி அவர் மறைய, ஆங்கு ஓர் விநாயகர் ஆலயத்தை ப்ரதிஷ்டை செய்து தந்தையை வணங்கி மஹாபலியிடம் சென்ருர் வாமனர்.

மஹாபலி வாமனரை வணங்கி வேண்டியதைத் தருகிறேன் என, மூன்றடி மண்ணேயே அவர் வேண்டினர். இது எதற்கு பயன்படும்? மூன்று வீடு மூன்று நகரம் உலகை வேண்டுமாலுைம் தருகிறேன் என்ருன் பலி. ஶுக்ரர் இவர் மஹா விஷ்ணு. இந்த்ரனுக்கு உனது ராஜ்யத்தைப் பிடுங்கித்தரவே யாசிக்கிருர். தாநம்செய்யாதே என்று தடுத்தார். காலம் தேசம் பாத்ரம் வஸ்து எல்லாம் சிறந்ததாய் இருக்கின்றன. ஆதால் தாநமளிப்பேனென்று தந்தார். வாமநர் த்ரிவிக்ரமனுகத்தோன்றி பூமியையளந்து ஸ்வர்க்கத்தை இந்த்ரனுக்கு அளித்தார். அவர் ப்ரதிஷ்டைசெய்த விநாயகரே வாமந விநாயகர். அதன் பூஜையினுல்தான் வேடனும் ராக்ஷஸனும் நற்கதி பெற்றனர்.

***ஶமீபத்ர மஹிமையும் க்ஷிப்ர ப்ரஸாதனும் :*** பரம சிவன் பார்வதிக்குக் கூறியது. ஶமீபத்ரம் கணேஶனுக்கு மிகப்ரியமானது. தூர்வை மல்லிகாதி புஷ்பம், யாகம் வேதம், ஜபம், உபவாஸம் முதலிய எல்லாவற்றையும் விட. வந்நியால் பூஜைசெய்பவரிடம் ஸந்தோஷங்கொண்டு வேண்டிய வரமளிப்பார். பிரியவ்ரதன் என்ற அரசனுக்கு கீர்த்தி, ப்ரபா என இரு பத்நிகளிருந்தனர். ப்ரபை என்ற இளையவளிடம் மோஹங்கொண்டு மூத்தவளே அவமதித்து வந்தான் மன்னன். பதியின் பலத்தைக்கொண்டு ப்ரபை, கீர்த்தியை அடிமையாக்கி தங்களுக்குத் தொண்டு புரியச்செய்தாள். ஒருநாள் கீர்த்தி கால் இடறி பூமியில் விழுந்தபோது கோபங்கொண்ட ப்ரபை அவளேக் காலால் உதைத்தாள். அந்த துக்கத்தினுல் அவள் கதரி அழுது கொண்டிருக்கும்பொழுது தேவலர் எனும் புரோஹிதர் வந்து விநாயகரைப் பூஜித்துவா ! உனது குறை அகலும்!

என்று உபதேசித்தார். அவளும் பக்தியுடன் இடைவிடாமல் தூர்வையால் அவரை அர்ச்சித்து வந்தாள்.

ப்ரபைக்கு ஒரு குழந்தை பிறக்க பத்மநாபி எனப் பெயரிட்டு தாயையும் சேயையும் பன்மடங்கு அன்புடன் ஆதரித்துவந்தான் அரசன். கீர்த்தி தினந்தோறும் தூர்வையால் கணேசரைப் பக்தியுடன் பூஜித்துவர இவளது தோழிகள் தூர்வை கிட்டாததால் சமீபத்ர மெனும் வஹ்னி இலையைக் கொண்டுவந்து கொடுத்தார்கள். அதைக்கொண்டு அவள் பூஜைசெய்தாலும் தூர்வை அகப்படும்வரை உபவாஸத்துடனே இருந்தாள். அவளது உறுதியைக்கண்டு ஸந்தோஷமுற்ற விநாயகர் ப்ரத்யக்ஷமாகி, உனது குறை அகலும்! உனக்கும் ஓர் புத்திரன் பிறப்பான்! அவனுக்கு க்ஷிப்ரப்ரஸாதன் எனப் பெயர் வை! உனது சக்களத்தியினுல் அவனுக்கு ஆபத்து வரும்! என்ருலும், என் பக்தனது அருளால் அது நீங்கும்! அச்சமயம் சமீபத்ரத்தின் மஹிமையை நன்கு அறிவாய்! சமீபத்ரமும் தூர்வையை விட எனக்கு மிகப் பிரியமானது! எனக் கூறி மறைந்தார். சில நாட்கள் சென்றபின் ப்ரபையின் ப்ரபை மங்கிற்று. அழகு அகன்றது. அரசனுக்கு அவளிடமிருந்த மோஹம் முடிவடைந்தது.

கீர்த்தியிடம் அன்பு திரும்பிற்று. அறைக்ஷணமும் அவளைவிட்டுப் பிரிவதில்லை. விநயகர் அருளால் கர்ப்பிணி ஆகி அழகிய புத்ரனைப் பெற்ருள் கீர்த்தி. க்ஷிப்ர ப்ரஸாதன் என்ற பெயரிட்டு அவனை வளர்த்து வந்தாள். பொருமை கொண்ட ப்ரபை விஷங்கலந்த அன்னத்தை அவனுக்கு ஊட்ட, அவன் உயிர் துறந்தான்! அரசன் எவ்வளவு வைத்யம் மாந்த்ரீகம் செய்தும் அவன் பிழைக்கவில்லை! இறந்த குழந்தையைத் தூக்கிக்கொண்டு வனம் சென்று கதறிருள் கீர்த்தி. க்ருத்ஸமதர் எனும் கணேச பக்தன் அங்குவந்து, அவளைத் தேர்த்தி, சமீ பத்ரத்தினுல் கணேசனை நீ அர்ச்சித்த புண்யத்தை அவனுக்கு தானம் செய்! என்ருர். அவள் அங்ஙனம் செய்ய உடனே குழந்தை உயிர்பெற்று எழுந்தான்! அதைக்கண்டு ஆச்சர்யமடைந்தாள்! சமீபத்ரத்தின் மஹிமையை உணர்ந்து அன்று முதல் விடாமல் விநாயகரை சமீயினுல் பூஜை செய்து வந்தாள்.

நாரதர் தேவேந்திரனுக்குக் கூறிய கதையைக் கூறி ஶமீபத்ரம் உண்டான வகையை வர்ணிக்கின்றார் தேவலர்.

**ஸமீ உண்டான வகை:** மாளவ தேசத்தில் பௌரவர் எனும் ப்ராம்மணன் ஸுமேதா என்ற உத்தமியை மணந்து, விதிப்படி வேதமோதிய கர்மாக்களை வழுவாமல் அனுஷ்டித்து வந்தார். அவர்களுக்கு ஓர் கன்னிகை பிறக்க அதற்கு ஶமீகா எனப் பெயரிட்டு வளர்த்து வந்தார். ஏழாவது வயது வந்தவுடன் தௌம்ய மஹரிஷியின் புதல்வனும் ஶௌனகரின் சிஷ்யனுமான மந்தாரன் என்பவனுக்கு மணம் செய்வித்தார். இவர்களும் தௌம்யரைப் போல் நித்ய நைமித்திக கர்மாக்களை நன்கு செய்துவந்தனர். ஒருநாள் விநாயகரின் ஸாரூப்ய முக்தியைப்பெற்ற ப்ருசுண்டி என்பவர் இவரது ஆஶ்ரமத்திற்கு வந்தார். அவரது உருவைப் பார்த்தவுடன் இருவரும் நகைத்தார்கள். அவர் கோபித்து மந்தாரனை மந்தார மரமாகவும் ஶமீகையை ஶமீமரமாகவும் ஆகும்படி சபித்தார்.

ஒரு மாதமாகியும் இவர்களைக் காணுததால் பெற்றோர் மனம் கலங்கித் தேடிவந்தனர். முனிவர் ஶாபத்தினுல் இங்ஙனம் மரமானதை அறிந்து ஷடக்ஷரீ மந்திரத்தால் பன்னிரண்டு ஆண்டுகள் விநாயகரை நாடித் தௌம்யர் தவம் செய்தார். விநாயகர் ப்ரத்யக்ஷமாகி அவர்களது ஸ்தோத்ரத்தைக் கேட்டு ஸந்தோஷம் அடைந்தார். அவ்விருவர்களையும் முன்போலவே திவ்ய சரீர முள்ளவர்களாகச்செய்து இம்மரங்களிடையில் நான் ப்ரத்யக்ஷமானதால் மந்தார மலரும் ஶமீபத்ரமும் எனக்கு என்றும் ப்ரியமானது. யக்ஞம் தானம் தபஸ் முதலியவைகளால் ஆராதிப்பதைவிட ஶமீபத்ரத்தினுல் பூஜித்தால் அளவில்லா ஆனந்தமும் அக்ஷய்யமான பலனும் உண்டாகும். ஶமீயினிட முண்டாகும் குழந்தை அக்னியாவான் எனக் கூறி மறைந்தார். அவனே ஶமீகர்ப்பன் என்ற அக்னியானுன்.

**பிரம்மா விநாயகரை உபாஸித்தல் :** ஒரு ஸமயம் ஸஹ்யமலையில் ஸதாசிவன் ஸகல தேவர்களுடன் வீற்றிருக்கும்பொழுது சதுர்முகன் ஆங்கு ஓர் வேள்வி செய்யக்கருதினுர். சிவன் ஆணையின்படி ஸப்தரிஷிகளை அழைத்து வேள்வி ஆரம்பிக்கும் பொழுது முதலில் செய்யவேண்டிய விநாயக பூஜையை மறந்தார். கிருஹ

கார்யத்தில் ஈடுபட்ட ஸாவித்திரியை விட்டு காயத்ரீ எனும் மனைவியுடன் யாகத்தைத் துவக்கினர். இதைக் கண்ட ஸாவித்ரி கோபங்கொண்டு அனைவரையும் ஜடர்களாகும் படி (சைதன்ய மில்லாதவர்களாக) சபித்தாள். எல்லோரும் அவளை வணங்கி ஜடராவதற்குப் பதில் ஜலரூப மான நதியாக இருக்கின்றோமென வேண்டினர். பிரம்மா, தான் விநயகரைப் பூஜிக்காததால் இந்த கஷ்டத்திற்கு அமரர்களை ஆளாக்கினேமென வருந்தினர். தேவர்களில்லாமல் தேவவிமானம் மட்டிலும் அவரவர் வீடு வந்ததைக் கண்டு, தம் தம் கணவர் வராத காரணமறிய பிரம்மாவினிடம் வந்தார்கள் தேவஸ்த்ரீகள்.

பிரம்மா சிறிது பொருங்கள். மந்தார மரத்தின் அடியில் அமர்ந்து விநாயகரை நாடித் தவம் செய்து தேவர்களையும் எழுப்பி யக்ஞத்தையும் பூர்த்தி செய்கிறேன் என்றார். தேவ ஸ்திரீகள் விநயகர் பூஜைக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து, தூர்வை மந்தார புஷ்பம் சமீ பத்ரம் முதலியவைகளைக் கொண்டு கொடுத்தார்கள். அவர் செய்த பூஜையால் ஸந்தோஷமடைந்த விநாயகர் ஸித்திபுத்திகளுடன் ப்ரத்யக்ஷமானர். எல்லோருமவரைப் பணிந்து துதித்தனர். விநாயகர் நீ செய்த ஶமீபத்ர பூஜையினல் நூறுபாரம் ஸ்வர்ண புஷ்பத்தினல் உண்டாகும் ஸந்தோஷமடைந்தேன். இங்கு ஓராலயத்தை அமைத்து தூர்வை, ஶமீ, வெண்மையான தூர்வை முதலியவைகளால் பன்னிரண்டு ஆண்டுகள் பூஜை செய் என்றார். அங்ஙனமே அவர் செய்ய ஸகல தேவர்களும் அவரவர் உருவத்தைப் பெற்று விநாயகரை வணங்கி ஸ்தோத்ரம் செய்து பத்நிகளுடன் இருப்பிடம் சென்றனர். இதைக்கேட்ட கீர்த்தி க்ஷிப்ர ப்ரஸாதனென்ற தனது குழந்தைக்கும் சுலபமாய் உச்சரிக்கக் கூடிய விநாயகர் மந்திரத்தை உபதேசியுமென வேண்டினள். அங்ஙனமே நான்கு அக்ஷரமுள்ள விநாயக மந்த்ரத்தைக்கூறி காசியில் உண்டான அந்த டுண்டி கணேஶமூர்த்தியின் விருத்தாந்தத்தை வர்ணித்தார் தேவலர்.

**டுண்டிராஜர் சரிதம்:** அகஸ்த்யருக்கு ஸ்கந்தன் கூறியதைத் தேவலர் கீர்த்திக்கு வர்ணித்தார். விஷ்ணுவின் உத்தரவுப்படி ப்ரம்மா அண்டஜம் உத்பிஜ்ஜம் ஸ்வேதஜம் ஜராயுஜம் (அண்டஜ = முட்டையிலிருந்து உண்டாவது)

(உத்பிஜ்ஜ= பூமியிலிருந்து பிளந்துண்டாவது) (ஸ்வேதஜ =வியர்வையா லுண்டாவது) (ஜராயுஜ = கர்ப்பத்திஞல் உண்டாவது என்ற 84 லக்ஷம் ஜீவராசிகளைப் படைத்தார். அவைகளில் சிறந்தவரான மனிதர் நற்கார்யங்களைச் செய்யாமல் நரகம் செல்வதைக் கண்டு வருந்தி அவர்கள் நல்வழிபட அநேக புண்ய க்ஷேத்ரங்களையும் புண்ய தீர்த்தங்களையும் படைத்தார். எல்லா தீர்த்த ஸ்வரூபமான வாராணஸியையும் கங்கையையும்கண்டு பரமசிவன் மேலிருந்த வண்ணம் ஸந்தோஷத்திஞல் தலையை அசக்கிஞர். அவர் குண்டலத்திலிருந்து மணி பூமியில் விழ அந்த இடமே மணிகர்ணிகா எனும் கட்டமாக ஆனது.

காசியை மூன்று முறை மனதால் நினைத்தாலும் காசியில் வஸித்த புண்யமுண்டாகும். ஆங்கு இறந்தவர்கள் மோக்ஷமடைவார்கள். ப்ரளய காலத்திலும் அது அழிவதில்லை. அந்நகரத்தைச் சூலத்திஞல் ஏந்தி பரமசிவன் காக்கின்ருர். பரமசிவனே விநாயகராகவும் பிரம்மாவாகவும் விஷ்ணுவாகவும் அம்பிகையாகவும் சூர்யஞகவும் ஆகிருர். இம்மூர்த்திகளில் ஒருவரைத் துதித்தால் எல்லோரையும் துதித்ததாகும். ஒருவரை நிந்தித்தால் எல்லோரையும் நிந்தித்ததாகும். ஆதலால் எல்லோரும் ஒன்று. ஐந்தான மூர்த்திகளில் பேதம் பாராட்டலாகாது.

பஸ்மாஸுரனது புதல்வன் துராஸதனென்பவன் சுக்ராசார்யருபதேசப்படி பரமசிவனைப் பஞ்சாக்ஷரியால் ஆருயிரமாண்டுகள் ஆராதித்தான். பகவான் அவனெதிரில் தோன்றி சக்தியின் தேஜஸ்ஸிஞல் உண்டான ஒருவனே உன்னை ஜயிப்பான். மற்றவர்களிடமிருந்து உனக்குத் தோல்வி இல்லையென வரமளித்தார். பூமியிலுள்ள பூபதிகளையெல்லாம் ஜயித்து ரத்னங்களை யபஹரித்தான். இந்த்ரலோகம் ஸத்தியலோகம் வைகுண்டம் கைலாஸம் முதலிய உலகங்களுக்குச்சென்று அனைவரையும் வென்று அவர்களை வெவ்வேரிடம் போகும்படிச் செய்தான். இவனது தந்தை எவர் தலையில் கையை வைத்தாலும் அவர் சாம்பலாக ஆகவேண்டுமென்று வரம் பெற்று சிவனிடமே பரீக்ஷிக்க வந்தான். அச்சமயம் திருமால் மோஹினி வடிவம் எடுத்து அவனை மயக்கி நர்தனம் கற்பித்து அவன் தன் தலையில் கையை வைத்துக் கொள்ளும்படிச் செய்து

அவனைக் கொன்றார் தந்தைபோல் நான் ஏமாராமல் நான் எல்லோரையும் வென்று வசமாக்கினேன் என அவன் கூறும்பொழுது அவனியில் சிவராஜதானியெனும் காசியை நீ ஜெயிக்கவில்லை என மந்திரிகள் நினைவூட்டினார்கள். உடனே படையுடன் கிளம்பி காசி பட்டணத்தை சூழ்ந்து கொண்டான். தானே அவனுக்கு வரமளித்ததால் அவனை ஒன்றும் செய்யாமல் காசியை விட்டு சிவன் கேதாரம் சென்றார்.

துராஸதன் காசியையும் ஆக்ரமித்து தனது ஆட்சிச்கு உட்படுத்தினான். அதிகாரத்தையும் யாகபாகமான அம்ருத ஆஹாரத்தையுமிழந்த அமரர் சிவனிடம் சென்று கதறினார்கள். அவர் என்வரத்தின்படி குணேமன் எனும் கணபதி சக்தியினிடம் புத்ரனாகப்பிறந்து அவனைக் கொன்றாலன்றி வேறுவகையில்லை ஆதலால் கணேமனையும் பார்வதியையும் ஆராதியுங்கள் என்றார். அங்ஙனமே பூஜிக்க இருவரும் ப்ரத்யக்ஷமாகி அவ்வரக்கனை அடக்குவதாகக் கூறினர்.

அங்ஙனமே விநாயகர் தேவியினிடம் புத்ரனாக அவதரிக்க தேவி தனது வாகனமான சிம்ஹத்தையளித்து துராஸதனையும் அவன்போன்ற அரக்கர்களையும் கொன்று பூபாரத்தை அகற்று என்றாள். அங்ஙனமே விநாயகர் தேவகணம் படைசூழ காசிக்குச் சென்றார்.

விநாயகருக்கும் துராஸதனுக்கும் மிக பயங்கரமான போர் நடந்தது. ஆயுதங்கள் அனைத்தும் இழந்து பின் மல்யுத்தம் நடைபெற்றது. அதிலும் வெற்றியோ தோல்வியோ காணாததால் இருவரும் திவ்யாஸ்த்ரங்களைக் கொண்டு போர் புரிந்தனர். அஸுரரனுப்பிய ஆக்னேயாஸ்த்ரத்தை பர்ஜன்ய அஸ்த்திரத்தினாலும் வாயவ்யாஸ்திரத்தை வருணஅஸ்த்ரத்தினாலும் ருத்ராஸ்த்ரத்தை ப்ரஹ்மாஸ்த்ரத்தினாலும் எதிர்த்தார் விநாயகர். அரக்கன் அஸ்த்ரங்களனைத்தும் பாழாயின. பின் மந்திரிகளைப் போருக்கு அமைத்து அஸுரன் நல்ல பலமுண்டாகும்படியான உணவு உட்கொள்ளச் சென்றான். மந்திரிகள் பலர் ஒன்று கூடி ஒரே காலத்தில் தன்னை தாக்குவதைக்கண்டு விநாயகர் 56 மூர்த்திகளாகத் தோன்றி போர் புரிந்தார். பலர் கை, கால், வாஹனம் முதலியவைகளிழந்தனர். பலர் இறந்தனர். துராஸதன் வந்து இக்கோலத்தைக் கண்டு சிவன் கொடுத்த வரத்தை நினைத்தான்.

# ஸ்ரீ பகவத் கீதாஸார
# சுலோகமும் அர்த்தமும்.



ஓங்கோல் ஸ்ரீ V. முத்து அய்யருடைய குமாரன்

**M. சுந்தரராமன், (M. PHARM)**

ஞாபகார்த்த வெளியீடு.

[விளம்பிவருஷ பங்குனிமாத விசேஷ அனுபந்தம்.]



உ

# ஸ்ரீ பகவத் கீதாஸாரம்.

[ மஹா பாரதத்தில் எழுநூறு சுலோகங்களாக அமைக்கப்பட்ட ஸ்ரீ பகவத் கீதையின் ஸாரமாக ஆக்நேய புராணம் கூறும் ஸ்ரீ பகவத் கீதாஸாரம் 58 சுலோகம்.]

## ॥ श्री गीतासारः ॥

अग्निरुवाच ॥

गीतासारं प्रवक्ष्यामि सर्वगीतोत्तमोत्तमम् ।
कृष्णोऽर्जुनाय यामाह पुरा वै भुक्तिमुक्तिदाम् ॥ १ ॥

श्रीभगवानुवाच ॥

गतासुरगतासुर्वा न शोच्यो देहवानजः ।
आत्माऽजरोऽमरोऽभेद्य स्तस्माच्छोकादिकं त्यजेत् ॥ २ ॥
ध्यायतो विषयान्पुंसः सङ्गस्तेषूपजायते ।
सङ्गात्कामस्ततः क्रोधः क्रोधात्सम्मोह एव च ॥ ३ ॥
सम्मोहात्स्मृति विभ्रंशः बुद्धिनाशात्प्रणश्यति ।
दुःसङ्गहानिः सत्सङ्गा त्मोक्षकामी च कामनुत् ॥ ४ ॥
कामत्यागादात्मनिष्ठः स्थिरप्रज्ञस्तदोच्यते ।
या निशा सर्वभूतानां तस्यां जागर्ति संयमी ॥ ५ ॥
यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः ।
आत्मन्येवच सन्तुष्टः तस्य कार्यं न विद्यते ॥ ६ ॥
नैव तस्य कृतेनार्थो नाकृतेनेह कश्चन ।
तत्ववित्तु महाबाहो गुणकर्म विभागयोः ॥ ७ ॥
गुणा गुणेषु वर्तन्ते इति मत्वा न सज्जते ।
सर्वं ज्ञान प्लवेनैव वृजिनं सन्तरिष्यति ॥ ८ ॥
ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुतेऽर्जुन ।
ब्रह्मण्या धाय कर्माणि सङ्गं त्यक्त्वा करोति यः ॥ ९ ॥





உ

# ஸ்ரீ பகவத் கீதாஸாரம்.

**கீதாஸார: அக்னிருவாச.**

கீ³தாஸாரம் ப்ரவக்ஷ்யாமி ஸர்வகீ³தோத்த மோத்தமம் ।
க்ருஷ்ணோऽர்ஜுநாய யாமாஹ புராவை புக்தி முக்தித³ாம் ॥

**ஸ்ரீ பகவானுவாச.**

க³தாஸுரக³தாஸுர்வா நஶோச்யோ தே³ஹவாந் அஜ: ।
ஆத்மாऽஜரோऽமரோபே⁴த்³ய ஸ்தஸ்மாச்சோகா²திகம் த்யஜேத் ॥
த்⁴யாயதோ விஷயான் பும்ஸ: ஸங்க³ஸ்தேஷுபஜாயதே
ஸங்க³ாத் காமஸ் தத: க்ரோத: க்ரோதாத் ஸம்மோக ஏவச
ஸம்மோஹாத் ஸ்ம்ருதிவிப்ர⁴ம்ஶ: பு³த்திநாஶாத் ப்ராணஶ்யதி
து:³ ஸங்க³ஹாநி: ஸத்ஸங்காத் மோக்ஷகாமீச காமநுத் ॥
காமத்யாகா³ த்⁴ாத்மநிஷ்ட²: ஸ்திர² ப்ரக்ஞஸ்ததோ³ச்யதே
யாநிஶா ஸர்வபூ⁴தாநும் தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ ॥
யஸ்யாம் ஜாக்³ரதி பூ⁴தானி ஸாநிஶா பஶ்யதோமுனே: ।
ஆத்மந்யேவச ஸந்துஷ்ட²: தஸ்யகார்யம் நவித்யதே ॥
நைவதஸ்ய க்ருதேனார்தோ² நாக்ருதேநேஹ கஶ்சன ।
தத்வ வித்து மஹாப³ாஹோ கு³ணகர்ம விபா⁴க³யோ: ॥
கு³ணகு³ணேஷு வர்தந்தே இதிமத்வா நஸஜ்ஜதே ।
ஸர்வம் ஞான ப்லவேனைவ வ்ருஜினம் ஸந்தரிஷ்யதி ॥
ஞானாக்னி: ஸர்வகர்மாணி ப⁴ஸ்மஸாத் குருதேர்ஜுன ।
ப்³ரஹ்மண்யாதா⁴ய கர்மாணி ஸங்க³ம் த்யக்த்வாகரோதிய: ॥

लिप्यते न स पापेन पद्मपत्रमिवाम्भसा ।
सर्वभूतेषु चात्मानं सर्वभूतानि चात्मनि ॥ १० ॥
ईक्षते योगयुक्तात्मा सर्वत्र समदर्शनः ।
शुचीनां श्रीमतां गेहे योग भ्रष्टोऽभिजायते ॥ ११ ॥
नहि कल्याण कृत्कश्चिद्दुर्गतिं तात गच्छति ।
दैवीह्येषा गुणमयी मम माया दुरत्यया ॥ १२ ॥
मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्तिते ।
आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ ॥ १३ ॥
चतुर्विधा भजन्ते मां ज्ञानीचैकत्व मास्थितः ।
अक्षरं ब्रह्म परमं-स्वभावोऽध्यात्म मुच्यते ॥ १४ ॥
भूतभावोद्भवकरो विसर्गः कर्मसंज्ञितः ।
अधिभूतं क्षरोभावः पुरुषश्चाधि दैवतम् ॥ १५ ॥
अधियज्ञोहमेवात्र देहे देहभृतां वर ।
अन्तकालेस्मरन्माञ्च मद्भावं यात्यसंशयः ॥ १६ ॥
यं यं भावं स्मरन्नन्ते त्यजेद्देहं तमाप्नुयात् ।
प्राणं न्यस्य भ्रुवोर्मध्य अन्ते प्राप्नोति मत्परम् ॥ १७ ॥
ओमित्येकाक्षरम् ब्रह्म वदन्देहं त्यजन्तथा ।
ब्रह्मादिस्तम्ब पर्यन्ताः सर्वे मम विभूतयः ॥ १८ ॥
श्रीमन्तश्चोर्जिताः सर्वे ममांशाः प्राणिनः स्मृता ।
अहमेको विश्वरूप इतिज्ञात्वा विमुच्यते ॥ १९ ॥
क्षेत्रं शरीरं यो वेत्ति क्षेत्रज्ञः स प्रकीर्तितः ।
क्षेत्र क्षेत्रज्ञयोर्ज्ञानं यत्तत्ज्ञानं मतं मम ॥ २० ॥
महाभूतान्यहङ्कारो बुद्धिरव्यक्त मेव च ।
इन्द्रियाणि दशैकञ्च पञ्चचेन्द्रिय गोचराः ॥ २१ ॥

லிப்யதே ந ஸ பாபேன பத்3மபத்ர மிவாம்ப4ஸா ।
ஸர்வபூ4தேஷு சாத்மானம் ஸர்வபூ4தானி சாத்மனி ॥
ஈக்ஷதேயோக யுக்தாத்மா ஸர்வத்ர ஸமத3ர்ஶன: ।
ஶுசினும் ஸ்ரீமதாம் கே3ஹேயோக2ப்4ரஷ்டோ பி4ஜாயதே ॥
நஹி கல்யாணக்ருத் கஶ்சித்து3ர்க3திம் தாதக3ச்ச2தி ।
தை3வீஹ்யேஷா கு3ணமயீ மம மாயா து3ரத்யயா ॥
மாமேவ யே ப்ரபத்3யந்தே மாயாமேதாம் தரந்தி தே ।
ஆர்தோ ஜிக்ஞாஸு ரர்தா2ர்தீ2 ஞானீ ச ப4ரதர்ஷப4 ॥
சதுர்விதா4 ப4ஜந்தேமாம் ஞானீசைகத்வ மாஸ்தி2த: ।
அக்ஷரம் ப்3ரஹ்ம பரமம் ஸ்வபா4வோ ऽத்4யாத்ம முச்யதே ॥
பூ4த பா4வோத்3 ப4வகரோ விஸர்க3: கர்மஸம்ஞித: ।
அதி4பூ4தம் க்ஷரோபா4வ: புருஷஶ் சாதி4 தை3வதம் ॥
அதி4யக்ஞோऽஹ மேவாத்ர தே3ஹே தே3ஹ ப்ருதாம்வர ।
அந்தகாலே ஸ்மரன்மாஞ்ச மத்3பா4வம் யாத்யஸம்ஶய: ॥
யம்யம் பாவம் ஸ்மரன்னந்தே த்யஜேத்தே3ஹம் தமாப்னுயாத்
ப்ராணம் ந்யஸ்ய ப்4ருவோர் மத்4யே அந்தே ப்ராப்னோதிமத்பரம்.
ஓமித்யே காக்ஷரம் ப்ர3ஹ்மவத3ந்தே3ஹம் த்யஜன்ததா ।
ப்4ரஹ்மாதி3 ஸ்தம்ப3பர்யந்தா: ஸர்வே மமவிபூ4தய: ॥
ஸ்ரீமந்தஸ் சோர்ஜிதாஸ் ஸர்வே மமாம்ஶா: ப்ராணிந: ஸம்ருதா :
அஹமேகோ விஶ்வரூப இதிக்ஞாத்வா விமுச்யதே ॥
க்ஷேத்ரம் ஶரீரம்யோ வேத்தி க்ஷேத்ரஞ: ஸ ப்ரகீர்த்தித: ।
க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞயோர் ஞானம் யத்தத் ஞானம் மதம் மம ॥
மஹா பூ4தான் யஹங்காரோ பு3த்தி4 ரவ்யக்த மேவச ।
இந்த்3ரியாணி த3ஶைகஞ்ச பஞ்ச சேந்த்ரிய கோசரா: ॥

इच्छाद्वेषः सुखं दुःखं-सङ्घातश्चेतना धृतिः ।
एतत्क्षेत्रं समासेन सविकार मुदाहृतम् ॥ २२ ॥
अमानित्व मदम्भित्व महिंसा क्षान्तिरार्जवम् ।
आचार्योपासनं शौचं स्थैर्यमात्मविनिग्रहः ॥ २३ ॥
इन्द्रियार्थेषु वैराग्य मनहङ्कार एव च ।
जन्ममृत्यु जराव्याधि दुःखदोषानु दर्शनम् ॥ २४ ॥
असक्तिरनभिष्वङ्गः पुत्रदार गृहादिषु ।
नित्यञ्च समचित्तत्वं इष्टानिष्टोप पत्तिषु ॥ २५ ॥
मयिचानन्य योगेन भक्तिरव्यभिचारिणी ।
विविक्त देशसेवित्व मरतिर्जन संसदि ॥ २६ ॥
अध्यात्म ज्ञान निष्ठत्वं तत्वज्ञानानु दर्शनम् ।
एतज्ज्ञानमिति प्रोक्तं अज्ञानं यदतोन्यथा ॥ २७ ॥
ज्ञेयं यत्तत्प्रवक्ष्यामि यज्ज्ञात्वाऽमृत मश्नुते ।
अनादि परमं ब्रह्म सत्वं नाम तदुच्यते ॥ २८ ॥
सर्वतः पाणिपादन्तम् सर्वतोऽक्षिशिरोमुखम् ।
सर्वतः श्रुतिमल्लोके सर्वमावृत्य तिष्ठति ॥ २९ ॥
सर्वेन्द्रिय गुणाभासं सर्वेन्द्रिय विवर्जितम् ।
असक्तं सर्वभृच्चैव निर्गुणं गुणभोक्तृ च ॥ ३० ॥
बहिरन्तश्च भूतानां अचरं चरमेव च ।
सूक्ष्मत्वात्तदविज्ञेयं दूरस्थं चान्तिकेचयत् ॥ ३१ ॥
अविभक्तं च भूतेषु विभक्तमिवचस्थितम् ।
भूतभर्तृ च विज्ञेयं ग्रसिष्णु प्रभविष्णु च ॥ ३२ ॥
ज्योतिषामपि तज्ज्योतिस्तमसः परमुच्यते ।
ज्ञानं ज्ञेयं ज्ञानगम्यं हृदि सर्वस्य धिष्ठितम् ॥ ३३ ॥
ध्यानेनात्मनि पश्यन्ति केचिदात्मान मात्मना ।
अन्ये साङ्ख्येन योगेन कर्मयोगेन चापरे ॥ ३४ ॥

இச்சா2 த்3வேஷ: ஸுக2ம் து:3க2ம் ஸங்கா4தஶ் சேதனாத்ருதி:
ஏதத் க்ஷேத்ரம் ஸமாஸேந ஸவிகார முதா3ஹ்ருதம் ||
அமானித்வ மத3ம்பித்வ மஹிம்ஸா க்ஷாந்திரார்ஜவம் |
ஆசார்யோ பாஸனம் சௌசம் ஸ்தை2ர்ய மாத்மவினிக்ரஹ:
இந்த்ரியார்தே2ஷு வைராக்3யம் அநஹங்கார ஏவச |
ஜன்ம ம்ருத்யு ஜராவ்யாதி4 து:3க2தோ3ஷானு த3ர்ஶனம் ||
அஶக்தி ரனபி4ஷ்வங்க3: புத்ர தா3ர க்ரு3ஹாதி3ஷு ।
நித்யஞ்ச ஸமசித்தத்வம் இஷ்டானிஷ்டோப பத்திஷு ||
மயிசானன்ய யோகே3ன ப4க்தி ரவ்யபி4சாரிணீ |
விவிக்த தேஶ ஸேவித்வ மரதிர் ஜனஸம்ஸதி ||
அத்4யாத்ம ஞானநிஷ்ட2த்வம் தத்வஞான நுத3ர்ஶனம் |
ஏதத்3 ஞானமிதிப்ரோக்தம் அஞானம் யத3தோன்யதா2 ||
ஞேயம் யத்தத் ப்ரவக்ஷ்யாமி யக்ஞாத்வாऽம்ருதமஶ்னுதே |
அனாதி3 பரமம் ப்ரம்ஹ ஸத்வம் நாமதது3ச்யதே ||
ஸர்வத: பாணிபா3தம்தம் ஸர்வதோக்ஷி ஶிரோமுகம் |
ஸர்வத: ஶ்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்டதி ||
ஸர்வேந்த்3ரிய கு3ணாபா3ஸம் ஸர்வேந்த்ரி3ய விவர்ஜிதம் |
அஸக்தம் ஸர்வப்3ருச்சைவ நிர்கு3ணம் கு3ணபோ4க்த்ருச ||
ப3ஹிரந்தஶ்ச பூ4தானாம் அசரம் சரமேவச |
ஸூக்ஷ்மத்வாத் தத3விஞேயம் தூ3ரஸ்த2ம் சாந்திகேசதத் ||
அவிப4க்தஞ்ச பூ4தேஷு விப4க்தமிவச ஸ்தி2தம் |
பூ4தப4ர்த்ருச விக்ஞேயம் க்3ரஸிஷ்ணு ப்ரப4விஷ்ணு ச ||
ஜ்யோதிஷாமபி தஜ்ஜ்யோதிஸ் தமஸ: பரமுச்யதே |
க்ஞானம் க்ஞேயம் க்ஞானக3ம்யம் ஹ்ருதி3ஸர்வஸ்ய தி4ஷ்டிதம்
த்4யானேநாத்மனி பஶ்யந்தி கேசிதா3த்மான மாத்மனா |
அன்யே ஸாங்க்2யேன யோகே3ன கர்மயோகேன சாபரே ||

अन्येत्वेव मजानन्तः श्रुत्वान्येभ्य उपासते ।
तेपि चाशु तरन्त्येव मृत्युं श्रुतिपरायणाः ॥ ३५ ॥
सत्वात्सञ्जायते ज्ञानं रजसो लोभ एव च ।
प्रमादमोहौ तमसो भवतो ज्ञानमेव च ॥ ३६ ॥
गुणा वर्तन्त इत्येव योऽवतिष्ठति नेङ्गते ।
मानावमान मित्रारितुल्य स्त्यागी स निर्गुणः ॥ ३७ ॥
ऊर्ध्वमूलमधः शाख मश्वत्थं प्राहुरव्ययम् ।
छन्दांसि यस्य पर्णानि यस्तं वेद स वेदवित् ॥ ३८ ॥
द्वौ भूतसर्गौ लोकेऽस्मि न्दैव आसुर एव च ।
अहिंसादिः क्षमाचैव दैवीसंपत्तितो नृणाम् ॥ ३९ ॥
न शौचं नापि चाचारो ह्यासुरी सम्पदोद्भवः ।
नरकत्वात्क्रोधलोभ कामस्तस्मात्त्रयं त्यजेत् ॥ ४० ॥
यज्ञस्तपस्तथा दानं सत्वाद्यैस्त्रिविधं स्मृतम् ।
आयुःसत्वं बलारोग्य सुखायान्नं तु सात्विकम् ॥ ४१ ॥
दुःखशोकामयायान्नं तीक्ष्णरूक्षणान्तु राजसम् ।
अमेध्योच्छिष्टपूत्यन्नं तामसं नीरसादिकम् ॥ ४२ ॥
यष्टव्यो विधिना यज्ञो निष्कामाय स सात्विकम् ।
यज्ञः फलाय दम्भात्मा राजसस्तामसः क्रतुः ॥ ४३ ॥
श्रद्धा मन्त्रादिविध्युक्तं तपः शारीरमुच्यते ।
देवादिपूजाहिंसादि वाङ्मयं तप उच्यते ॥ ४४ ॥
अनुद्वेगकरं वाक्यं सत्यं स्वाध्याय सज्जपः ।
मानसं चित्तसंशुद्धे मौन मात्मविनिग्रहः ॥ ४५ ॥
सात्विकञ्च तपोऽकामं फलाद्यर्थन्तु राजसम् ।
तामसं परपीडायै सात्विकं दानमुच्यते ॥ ४६ ॥
देशादौ चैव दातव्य मुपकाराय राजसम् ।
अदेशादावचज्ञातं तामसं दानमीरितम् ॥ ४७ ॥

அன்யேத்வேவ மஜானந்த: ஶ்ருத்வான்யேப்4ய உபாஸதே
தேபிசாஶு தரந்த்யேவ ம்ருத்யும் ஶ்ருதிபராயணா: ॥
ஸத்வாத் ஸஞ்ஜாயதே க்ஞானம் ரஜஸோ லோப4ஏவச ।
ப்ரமாத3 மோஹெள தமஸோ ப3வதோऽக்ஞானமேவச ॥
கு3ணாவர்தந்த இத்யேவ யோऽவதிஷ்ட2தி நேங்கதே ।
மானாவமான மித்ராரி துல்யஸ் த்யாகீ3 ஸநிர்குண: ॥
ஊர்த்4வமூல மத4ஶ்ஶாக2ம் அஶ்வத்த4ம் ப்ராஹுரவ்யயம்
ச2ந்தா3ம்ஸி யஸ்ய பர்ணானி யஸ்தம்வேத4 ஸவேத3வித் ॥
த்3வெள பூ4தஸர்கெள3 லோகேஸ்மின்தே3வ ஆஸுர ஏவச
அஹிம்ஸாதி;3 க்ஷமாசைவ தை3வீஸம்பத் திதோங்ருணாம் ॥
நஶௌசம் நாபிசாசாரோ ஹ்யாஸுரீ ஸம்பதோ3த்3ப4வ:
நரகத்வாத் க்ரோத4லோப4 காமஸ் தஸ்மாத் த்ரயம் த்யஜேத்
யக்ஞஸ் தபஸ் ததா2தா3நம் ஸத்வாத்யை ஸ்திரிவிதம் ஸ்ம்ருதம்
ஆயுஸ் ஸத்வம் ப3லாரோக்3ய ஸுகா2யான்னம் துஸாத்விகம்
து:3க2 ஶோகா மயாயான்னம் தீக்ஷ்ணருக்ஷணாந் து ராஜஸம் ।
அமேத்4யோச்சி2ஷ்ட பூத்யன்னம் தாமஸம் நீரஸாதி3கம் ॥
யஷ்டவ்யோ விதி4நா யக்ஞோ நிஷ்காமாயஸ ஸாத்விகம்:
யக்ஞ: ப2லாய த3ம்பா4த்மா ராஜஸஸ் தாமஸ: க்ரது: ॥
ஶ்ரத்தா4 மந்த்ராதி3 வித்4யுக்தம் தப: ஶாரீர முச்யதே ।
தே3வாதி3 பூஜாஹிம்ஸாதி3 வாங்மயம் தபஉச்யதே ॥
அனுத்3வேக3கரம் வாக்யம் ஸத்யம் ஸ்வாத்4யாய ஸஜ்ஜப: ।
மானஸம் சித்தஸம் ஶுத்தே4ர் மௌன மாத்மவினிக்3ரஹ:
ஸாத்விகஞ்ச தபோऽகாமம் பலாத்3யர்த4ந்து ராஜஸம் ।
தாமஸம் பரபீடா3யை ஸாத்விகம் தா3னமுச்யதே ॥
தே3ஶாதௌ3 சைவதா3தவ்யம் உபகாராய ராஜஸம் ।
அதே3ஶாதா3வவக்ஞாதம் தாமஸம் தா3னமீரிதம் ॥

ॐ तत्सदितिनिर्देशो ब्रह्मणस्त्रिविधः स्मृतः ।
यज्ञदानादिकंकर्म भुक्तिमुक्तिप्रदं नृणाम् ॥ ४८ ॥
अनिष्टमिष्टंमिश्रञ्च त्रिविधंकर्मणःफलम् ।
भवत्यत्यागिनांप्रेत्य नतुसन्न्यासिनांक्वचित् ॥ ४९ ॥
तामसः कर्मसंयोगा न्मोहात्क्लेशभयादिकात् ।
राजसः सात्विकोऽकात्मात्पञ्चैते कर्महेतवः ॥ ५० ॥
अधिष्ठानं तथाकर्ता करणञ्च पृथग्विधम् ।
विविधाश्चपृथक्चेष्टा दैवञ्चैवात्र पञ्चमम् ॥ ५१ ॥
एकंज्ञानंसात्विकंस्यात् पृथग्ज्ञानन्तु राजसम् ।
अतत्वार्थं तामसंस्यात् कर्माऽकामाय सात्विकम् ॥ ५२ ॥
कामाय राजसं कर्म मोहात्कर्म तु तामसम् ।
सिद्ध्यसिद्ध्योः समः कर्त्ता सात्विको राजसोह्यपि ॥ ५३ ॥
शठोऽलसस्तामसःस्या त्कार्य्यादिधीश्च सात्विकी ।
कार्यार्थं सा राजसीस्यात् विपरीतातु तामसी ॥ ५४ ॥
मनोधृतिः सात्विकीस्यात् प्रीतिकामेति राजसी ।
तामसी तु प्रशोकादौ सुखंसत्वात्तदन्तगम् ॥ ५५ ॥
सुखं तद्राजसञ्चाग्रे अन्ते दुःखन्तु तामसम् ।
अतःप्रवृत्तिर्भूतानां येन सर्वमिदं ततम् ॥ ५६ ॥
स्वकर्मणा तमभ्यर्च्य विष्णुं सिद्धिञ्च विन्दति ।
कर्मणा मनसावाचा सर्वावस्थासु सर्वदा ॥ ५७ ॥
ब्रह्मादिस्तम्ब पर्यन्तं जगद्विष्णुं च वेत्ति यः ।
सिद्धिमाप्नोति भगवद्भक्तो भागवतो ध्रुवम् ॥ ५८ ॥

इत्याग्नेये आदिपुराणे गीतासारो नामैकाशीत्यधिक
त्रिशततमोऽध्यायः ॥

---

எல்லாவற்றையும் பகவானிடம் அர்ப்பணம் செய்து எந்த கர்மாவைச்செய்தாலும் தாமரையிடம் நீர் ஒட்டாதது போல் அவனிடம் ஒன்றும் சேராது.

ஸர்வ பிராணிகளிடமும் தன்னேயும் தன்னிடம் ஸர்வ பிராணிகளேயும் காணும் யோகி எங்கும் ஆத்மாவைக் காண்பான்.

யோகத்திலிருந்து நழுவியவன் சுத்தமான செல்வ வான் வீட்டில் பிறப்பான். நல்லதைச் செய்பவன் ஒரு நாளும் கெடமாட்டான். மாயை என்பது தேவ ஸம்பந்த முள்ளது. மூன்று குணவடிவமானது. அதைமீற எவரா லும் இயலாது. என்னேயே எவன் சரணமடைகிருனே அவனே அதை தாண்டுவான்.

துன்பமடைந்தவன், அறியவிரும்புபவன், செல்வத்தை விரும்புபவன், க்ஞானி என்ற நான்கு வகையானவர்கள் என்னே உபாஸிக்கிருர்கள். க்ஞானி என்னுடன் ஒன்ருகி லயிப்பான்.

அழியாதது, மாருதது பரப்ரும்மம். அதன் ஸ்வபாவ மே அத்யாத்ம எனப்படும். பிராணிகளேப் படைப்பதே கர்மாவாம். அழியும் தன்மையுள்ளது. அதிபூதம் அதி தெய்வமென்பது புருஷன் உடலில், அதியக்ஞமென்பது நானே. அந்தக் காலத்தில் என்னே நினேப்பவன் என்னே அடைகிருன். ஸம்ஶயமில்லே. எதை நினேத்து உடலே விடுகிருனே அதையே அடைகிருன்.

புருவங்களுக்கிடையே பிராணனே நிறுத்து அந்த்ய காலத்தில் ஓம் என்ற ஏகாக்ஷரமான பிரும்மத்தை நினே த்து உடலே விடுபவன் என்னே அடைவான்.

பிரும்மா முதல் ஸ்தம்பமெனும் மிகச்சிறிய ஜந்து வரை உள்ள எல்லாம் எனது அம்சமேயாகும். அழகுள்ள தும் பலமுள்ளதுமானவை எனது தேஜஸ்ஸால் உண்டா னவை. நான் ஒருவனே ஸகல ரூபமாகவும் இருப்பவன் என உணர்ந்தவன் பந்தத்திலிருந்து விடுபடுவான். க்ஷேத் ரமென்பது உடல் என எவன் அறிகிருனே அவன் க்ஷேத்ரக்ஞன்.

க்ஷேத்ர க்ஷேத்ரங்ஞர்களேப் பற்றிய க்ஞானம் எனது க்ஞானமாகும். மகா பூதங்கள் அஹங்காரம் புத்தி அவ் யக்தம் பதினேரு இந்த்ரியங்கள். இந்த்ரியங்களால்

அறியத்தக்க ஐந்து விஷயங்கள் இச்சை த்வேஷம் ஸுகம் துக்கம் இந்தக்கூட்டம் சேதனை தைர்யம் ஆகிய இவைகள் அவைகளின் மாறுதல்களுடன்கூட சுருக்கமாக க்ஷேத்ரம் எனப்படும்.

கர்வம், தம்பம், அஹிம்ஸை, பொறுமை, கபடம் இல்லாமை, ஆசார்ய பூஜை, சௌசம், ஸ்திரமாயிருத்தல், சௌர்யம், மநதை அடக்குதல், விஷய வைராக்யம், அஹங்காரமில்லாமை, ஜநந மரணம், கிழத்தனம், நோய், துக்கம் முதலிய தோஷங்களை நினைத்தல், இஷ்ட அநிஷ் டங்களில் ஸமமாக இருத்தல், பகவானிடத்தில் ஏகாந்த மான பக்தி, ஏகாந்தமான இடத்தில் வஸிப்பது, ஜனக் கூட்டத்தில் விருப்பில்லாமை, வேதாந்த நிஷ்டை, தத்வ க்ஞாநம் ஆகியவை க்ஞாநமாகும். இதற்குமாறுனவை அக்ஞாநமாகும்.

எதை அறிந்து மோக்ஷத்தை அடையலாமோ அதைக் கூறுகிறேன். அநாதியான பரப்ரும்மம் ஸத்வமெனப் படும். அது எங்கும் கை, கால், கண், காது, தலை, வாய், முதலியன உள்ளது. உலகெலாம் பரவி இருப்பது அது. ஸகல இந்திரியமுள்ளது போல் தோற்றும்; ஒரு இந்திரியமும் இல்லாதது. பற்றே இல்லாதது. எல்லா வற்றையும் ரக்ஷிப்பது. குணமில்லாதது. குணங்களை அநுபவிப்பது போலுள்ளது. பிராணிகளுக்கு உள்ளும் புறமுமுள்ளது. சர அசரமானது. ஸூக்ஷ்மமானதால் அறிய முடியாதது. அறிவில்லாதவர்க்கு தூரத்திலும் அறிவாளிக்கு அருகிலுமுள்ளது.

பிராணிகளிடம் ஸமமாகயிருப்பது. ஆனால் தனித்தனி யாக இருப்பதுபோல் காணப்படுவது. பிராணிகளைப் படைத்துப் பரிபாலித்து விழுங்குவதுமாகும். ஜோதிஸ்ஸு களுக்கெல்லாம் ஜோதிஸ்ஸானது. தமஸ்ஸுக்கு மேலானது.

அறிவு அறியத்தக்கது. அறிவால் அடையத்தக்கது. எல்லோர் உள்ளத்திலும் உள்ளது. இத்தகைய ஆத் மாவை சிலர் தியாநத்தினால் தனக்குள்ளேயே பார்க்கி றார்கள். சிலர் ஸாங்க்ய யோகத்தாலும் சிலர் கர்ம யோகத்தாலும் அறியாத சிலர் மற்றவரிடம் கேட்டும் உபாஸிக்கிறார்கள். வேத வழியைப் பின்பற்றிய அனை வரும் ஜநந மரணத்தைக் கடக்குகிறார்கள்.

ஓம் தத்ஸதி3தி நிர்தே3ஶோ ப்ர3ஹ்மணஸ்த்ரிவித:4ஸ்ம்ருத:
யக்ஞ தா3னாதி3கம் கர்ம பு4க்தி முக்தி ப்ரத3ம் ந்ருணாம் ॥
அனிஷ்ட மிஷ்டம் மிஶ்ரஞ்ச த்ரிவித4ம் கர்மண: ப2லம் ।
ப4வத்ய த்யாகி3னாம் ப்ரேத்ய நதுஸந்யாஸினாம் க்வசித்.
தாமஸ: கர்மஸம்யோகா3த் மோஹாத் க்லேஶ ப4யாதி3காத்
ராஜஸ: ஸாத்விகோऽகாமாத் பஞ்சைதே கர்மஹேதவ: ॥
அதி4ஷ்டா2னம் ததா2கர்தா கரணம் ச ப்ருத2க்3வித4ம் ।
விவிதா4ஶ்ச ப்ருத2க் சேஷ்டா தை3வஞ் சைவாத்ர பஞ்சமம்
ஏகம் ஞானம் ஸாத்விகம் ஸ்யாத் ப்ருத2க் ஞானம்துராஜஸம்
அதத்வார்த2ம் தாமஸம் ஸ்யாத் கர்மா காமாய ஸாத்விகம் ॥
காமாய ராஜஸம் கர்ம மோஹாத் கர்மது தாமஸம் ।
ஸித்3வ4யஸித்3வ4யோ: ஸம: கர்தா ஸாத்விகோ ராஜஸோஹ்யபி ॥
ஶடோ2ऽலஸஸ் தாமஸ: ஸ்யாத் கார்யாதி3தீ4ஶ்ச ஸாத்விகீ
கார்யார்த2ம் ஸா ராஜஸீ ஸ்யாத் விபரீதாது தாமஸீ ॥
மனோத்4ருதி: ஸாத்விகீ ஸ்யாத் ப்ரீதிகாமேதி ராஜஸீ ।
தாமஸீது ப்ரஶோகாதௌ3 ஸுகம் ஸத்வாத் தத3ந்தக3ம் ॥
ஸுக2ம் தத்3ராஜஸஞ் சாக்3ரே அந்தேது:3 க2ந்துதாமஸம் ।
அத: ப்ரவ்ருத்திர் பூ4தானாம் யேன ஸர்வமித3ம் ததம் ॥
ஸ்வகர்மணா தமப்3யர்ச்ய விஷ்ணும் ஸித்3தி4ஞ்ச விந்த3தி ।
க்ர்மணா மனஸா வாசா ஸர்வாவஸ்தா2 ஸுஸர்வதா ॥
ப்3ரஹ்மாதி3 ஸ்தம்ப3 பர்யந்தம் ஜக3த்3 விஷ்ணுஞ்ச வேத்திய:
ஸித்திமாப்னோதி ப4கவத்3 ப4க்தோ பா4க3வதோ த்4ருவம் ॥

**இத்யாக்னேயே ஆதிபுராணே கீதாஸாரோநாம**
**ஏகாஶீத்யதி4க த்ரிஶத தமோத்4யாய: ॥**

---

## கீதாஸாரத்தின் பொருள்.

[ஷை மூலத்தையே அறியாதவர் அர்த்தத்தை, ஸ்நாநம் செய்தபின் ஆண்களும் பெண்களும் படித்தால் பகவத் கீதை 18 அத்யாயங்களையும் பாராயணம் செய்த பலனைப் பெறுவர். ஸ்வாமி முன்னிலையில் புத்தகத்தை வைத்து அவரே உபதேசிப்பதாகக் கருதி ஆரம்பிக்கலாம்.] அக்னி கூறினர்.

ஸர்வ கீதைகளிலும் மிகச்சிறந்ததான கீதாஸாரத்தை கூறுகிறேன் கேள். இது முன்னம் கிருஷ்ணனால் அர்ஜுந னுக்குபதேசிக்கப்பட்டது. போக மோக்ஷங்களைத் தருவது.

### பகவான் கூறினர்.

இறந்தவனை நாடியோ இருப்பவனை நாடியோ துக்கப் படவேண்டாம். உடலில் உள்ளவன் பிறப்பு இறப்பு இல்லா தவன். அவனே ஆத்மா. அவனை அழிக்கமுடியாது. உடல் அழிந்தால் அதற்காக சோக மோஹம் வேண்டாம்.

ஒரு பொருளை அடிக்கடி மநதினல் நினைத்தால் அதில் பற்று உண்டாகிறது. பிறகு அதையடையவேண்டுமென ஆசை உண்டாகிறது. அதற்கு தடையாய் இருப்பவரிடம் கோபம் உண்டாகிறது. கோபத்தால் மோஹம் உண்டா கிறது. மோஹத்தினல் ஸ்ம்ருதியிலிருந்து நழுவுவான். அதனல் புத்தி கெடும். முடிவில் நாமே அழிவோமாதலால் ஒன்றிலும் பற்று வைக்காதே. ஸத்ஸங்கத்தால் துஸ்ஸங் கத்தை விடு. உலக ஆசையை விடு. முக்தியிலாசைகொள்.

காமத்தை விட்டு ஆத்ம நிஷ்டையிலுள்ளவன் ஸ்திர ப்ரக்ஞன் எனப்படுவான். எல்லோரும் உறங்கும் ஆத்ம விஷயத்தில் க்ஞானி விழித்திருப்பான். எல்லோரும் விழித்திருக்கும் விஷயத்தில் க்ஞானி உறங்குவான். ஆத்ம ஸ்வரூபத்தில் ஈடுபட்டு பேரானந்தம் பெறும் க்ஞானிக்கு செய்யவேண்டிய வேலை ஒன்றுமில்லை.

குணம் கர்மா இவைகளின் தத்துவத்தை அறிந்தவன் குணம் குணத்துடன் இருக்கிறதென்று எண்ணி எதிலும் பற்று வைக்கமாட்டான்.

க்ஞானம் எனும் தோணியால் எல்லா துன்பங்களையும் கடப்பான். க்ஞானாக்நி ஸகல கர்மாக்களையும் சாம்ப லாக்கிவிடும்.

ஸத்வகுணத்தால் க்ஞாநம் உண்டாகும். ரஜஸால் லோபமும், தமஸால் ப்ரமாதம் மோஹம் அக்ஞாநங்களும் உண்டாகும்.

குணங்களே வேலை செய்கின்றன என க்ஞானி சலிக்காமல் இருப்பான். மாநம் அவமாநம் மித்ரன் ஶத்ரு ஆகியவரிடம் த்யாகி ஸமமாக இருப்பான். அவனிடம் ஒரு குணமும் காணப்படாது.

மேலே வேரும் கீழே கிளைகளும் வேத இலைகளுமுள்ள அச்வத்தம் என்பதை அறிபவன் வேதமறிந்தவனுவான்.

உலகில் தைவ ஆஸுர என இரு ஸம்பத்துகளுண்டு. அஹிம்ஸை முதலியதும் பொறுமையும் மனிதர்களுக்கு தெய்வ ஸம்பத்தாம். ஶௌசமில்லாமை ஆசாரமில்லாமை முதலியன ஆஸுர ஸம்பத். நரகத்தை அளிப்பதால் காமக்ரோத லோபங்களை விடவேண்டும்.

யக்ஞம் தபஸ் தாநம் இவை ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களால் மூன்று வகையாகும். ஸாத்விகமான அன்னம் ஆயுஸ் ஸத்வம் பலம் ஆரோக்யாதிகளைத் தரும். தீக்ஷ்ணமான காரமான ராஜஸ அன்னம் துக்கம் சோகம் நோய் முதலியவைகளை உண்டுபண்ணும். அமேத்யம் எச்சில் துர்க்கந்தமுள்ளது ரஸமில்லாதது தாமஸான்னம்.

யாகம் செய்யவேண்டுமென ஆசை இல்லாமல் விதிப்படி செய்வது ஸாத்வீக யக்ஞம். பலனைக்கோரியோ டம்பமாகவோ செய்வது ராஜஸ யக்ஞம்.

ஶ்ரத்தை மந்த்ரம் ஶ்ருதி தேவ பூஜை அஹிம்ஸை இவைகளைத் தவறுமல் செய்வது உடலால் செய்யும் தபமாகும். ஸாத்வீகமான சொல், ஸத்யம் வேதமோதல் நல்ல ஜபம் இவை வாக்கினலாகிய தவம். மநஸ்ஶுத்தி மௌநம் மநதை அடக்குதல் இவை மாநஸிக தவம்.

ஆசையில்லாமல் செய்யும் தவம் ஸாத்விகம். பலனை நாடி செய்வது ராஜஸ தவம். பிறரை ஹிம்ஸிப்பதற்குச் செய்வது தாமஸ தவம். நல்ல தேசத்தில் கொடுக்க வேண்டும் என்ற விதிப்படி தானம் செய்வது ஸாத்விகமாம். ஒரு உபகாரத்தை நாடிச்செய்வது ராஜஸ தானமாகும். தேச பாத்திரங்களைக் கவனியாமல் அவமதிப்புடன் கொடுப்பது தாமஸ தானமாகும். '' ஓம் தத் ஸத் '' என்று ப்ரஹ்மத்தை மூன்றுவிதமாகக் குறிப்பதாகும்.

யக்ஞும் தானம் முதலிய கர்மா, போகமோக்ஷத்தைத் தரு வதால் அனிஷ்டம், இஷ்டம், அனிஷ்டமும் இஷ்டமும் கலந்தது என்று கர்மாவிற்கு மூன்று வகை பலனுகும். இவை த்யாகம் செய்யாதவர்களுக்கு இறந்த பின் எற் படுவதாம்.

ஸன்யாஸிகளுக்கு ஒருபோதுமில்லே. தாமஸகுணம் க்லேசம், மோஹம் முதலியவைகளே உண்டுபண்ணும். ராஜஸம் காமக்ரோதங்களேயும் ஸாத்விகம் ஞானத்தை யும் உண்டுபண்ணும்.

ஒரு பொருள் உண்டாக இருப்பிடம் செய்பவன் பல வகையான கார்யங்கள் தனிக்காரணம், தெய்வம் என்ற ஐந்து காரணங்களுண்டு. ஒன்றே என்ற ஞானம் ஸாத்விக மாம். தனித்தனி என்பது ராஜஸம். தத்வமறியாமலிருப் பது தாமஸ ஞானமாகும். ஆசை இல்லாத கர்மா ஸாத் விகம். காமத்தோடு செய்வது ராஜஸம். மோஹத்திஞல் செய்வது தாமஸம்.

ஸித்தி அஸித்தி இவைகளில் ஸமமாயுள்ளவர் ஆசை கொண்டு கர்மா செய்பவர் ராஜஸ கர்த்தா. மூர்க்கனுகவும் சோம்பேறியாகவும் கர்மா செய்பவன் ராஜஸன். தத்வம் அறிந்தது ஸாத்விக புத்தியாம். வேறு வகையாக அறிவது ராஜஸம். தர்மத்தை அதர்மமென உணர்வது தாமஸமாம்.

மனம் முதலியவைகளே அடக்குவது ஸாத்விக தைர் யம். பரத்தில் ஆசைகொள்வது ராஜஸ தைர்யம். சோகம் மோகம் முதலியவைகளேத் தருவது தாமஸ தைர்யம். முடி வில் இன்பத்தைத் தருவது ஸாத்விகஸுகம். முதலிலே இன்பத்தைத் தருவது ராஜஸ ஸுகம். முடிவிலும் துன்பத் தைத் தருவது தாமஸ ஸுகம்.

எவரிடமிருந்து உலகம் உண்டாகிறதோ எவரால் உல கம் நிறைந்திருக்கின்றதோ அந்த விஷ்ணுவை உடலாலும் மனதிஞலும் வாக்கிஞலும் ஸ்வ கர்மாவைச்செய்து உபா ஸித்தால் விஷ்ணுவையும் ஸித்தியையும் அடைகிருன்.

ப்ரஹ்மா முதல் ஸ்தம்பம் வரையில் உள்ள உலகை விஷ்ணு என்று எவன் அறிகிருனே அவன் ஸித்தி அடை கிருன். பகவத் பக்தனுகவும் பாகவதனுகவுமாகிருன்.

**கீதாஸாரக் கருத்து முற்றிற்று.**

ஆதி புராணமான ஆக்நேயத்தில் கீதாஸாரம் என்ற 381.வது அத்யாயம் முற்றிற்று.

ஓம்: தத்: ஸத்:

சித்த மருந்துகளில்



நிறைந்த சாதனைகள் !

# நல்வாழ்வுப் பணி

## " சித்த மருத்துவத்தின் சிறப்பு "

சித்தர்களின்

அளவிலாப் பெருமைக்குச் சிறந்த அத்தாக்ஷி

**K. T. கிருஷ்ணமூர்த்தி ஆச்சாரியின்**

## "மேல்மாயில் மருந்து"

தீராத நாட்பட்ட சரும ரோகங்களுக்கு சிறந்த நிவாரணி.

.............. முழு விவரங்கட்கு எழுதுங்கள் ..............

சித்தர் டாக்டர்

**K. T. கிருஷ்ணமூர்த்தி ஆச்சாரி & சன்ஸ்,**

5/22 மேல்மாயில் P. O., N. A. DT.

Printed & Published by A. Venkataraman at The Sri Meenakshi Press, Sirkali.

Editor: Srivathsa V. Somadeva Sarma.